




# ஆஷா
## மங்கையர்களின் அழகை வெளிக் கொண்டு வருகிறது

ஆஷா ஸ்னோவும், பவுடரும் உங்களுடைய சருமத்தை மிருதுவாகவும் லாவண்ய மிக்கதாகவும் ஆகச் செய்கின்றன.
கருமை நிறைந்த ஆஷா கண் மை கண்களுக்கு குளுமையையும் இதத்தையும் தருகிறது.
மேலும், ஆஷா குங்குமத்தை இட்டுக கொள்ளுங்கள். இது மூன்று வண்ணங்களில் கிடைக்கிறது. அதாவன—ஃப்ளேம் ரெட் (தீச்சிவப்பு), ப்ரைட் ரெட் (பளிச்சென்று துலங்கும் சிவப்பு), மற்றும் கருப்பு.



Asha

**முகப் பவுடர் • ஸ்னோ • கண் மை • குங்குமம்**






# கல்கி பொருளடக்கம்

**பிலவங்க மார்கழி 9 டிச. 24**



**''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே**



''வீட்டிலே குழந்தை அழறது: என் மனைவி இங்கு பாட்டு கேட்டுண்டு இருக்கா!''

''குழந்தையை இங்கு எடுத்து வந்திருந்தால் அதையும் கேட்டு அழலாமே!''

நாங்களும்
மூன்றோடு நிறுத்திக்
கொண்டு விட்டோம்









ஆஸ்திரேலியாவுக்கு
வாருங்கள்!



கங்காருவைப் பார்த்துப்
பிரச்னைகளை விட்டு
எப்படி ஓடுவது என்று
கற்றுக் கொள்ளுங்கள்!

PK



தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

மலர் 27 ★ இதழ் 21



# நிலம் நடுங்கியது; நெஞ்சும் நடுங்கியது!

“தக்காண பீடபூமி இறுகிய நிலம் வாய்ந்த பிரதேசம். இங்கு பூகம்பம் ஏற்படச் சாத்தியமில்லை” என்பது நீண்ட நாட்களாக நிலவியல் நிபுணர்களிடையே நிலவிய கருத்து. ஆனால் இயற்கையின் இரகசியங்கள் மானுட அறிவை மீறியவை போலும். மகாராஷ்டிரத்தில் கொய்னாவில் நமது நெஞ்சை நடுங்க வைக்கும் பயங்கர நில நடுக்கம் ஏற்பட்டிருக்கிறது. சதாரா மாவட்டத்தில் அறுநூற்றுக்கு மேற்பட்ட கிராமங்களைப் பாதித்துள்ள இந்த பூகம்பத்தால் சுமார் இருநூறு பேர்கள் உயிரிழந்துள்ளனர். இரண்டாயிரத்துக்கு மேற்பட்டவர்கள் காயமுற்றுள்ளனர். சுமார் பத்து கோடி ரூபாய்க்குப் பொருள் நஷ்டம் ஏற்பட்டுள்ளது. கொய்னா மின்விசைத் திட்டம் இயங்காமற் போனதால் பம்பாயின் ஆலைகளில் வேலை நின்று போய், தினசரி மூன்று கோடி ரூபாய் பெறுமானமுள்ள உற்பத்தி தடைப்பட்டிருக்கிறது. மொத்தத்தில் நாடு முழுவதையும் பாதித்து விட்டது இந்த பூகம்பம்.

நாற்பத்தைந்து விநாடிகளுக்குள் இப்படிப்பட்ட உற்பாதம் நேர்ந்து பல இன்னுயிர்களைப் பலி கொண்ட கோரத்தை இலேசில் மறப்பதற்கில்லை. உயிரிழந்தவர்களின் ஆன்ம சாந்திக்கும், குற்றுயிராக இருப்பவர்கள் குணமடைவதற்கும் பிரார்த்தனை செலுத்துகிறோம். விபத்து சம்பவித்தவுடன் அரசாங்கமும், அண்டைப்புற மக்களும் வெகு விரைவுடன் கஷ்ட நிவாரணப் பணி புரிந்து தேசத்தின் பாராட்டைப் பெற்றுள்ளனர். ஆயினும் விபத்தால் பாதிக்கப்பட்டவருக்குச் செய்ய வேண்டியது இன்னும் எவ்வளவோ மீதமுள்ளது. அவசர உணர்ச்சியுடன் இவற்றை நிறைவேற்ற வேண்டியது மக்களின் கடமையும் அரசாங்கத்தின் பொறுப்புமாகும்.

பூகம்பத்தின் காரணங்களை ஆராய்வதால் எதிர்காலத்துக்குப் பயன் உண்டு. கொய்னா அணைக்கட்டில் ஏராளமான நீர் தேங்கியுள்ளதன் காரணமாகவே விபத்து நேரிட்டிருக்கலாம் என்பது பிரபல நிலவியல் நிபுணர் டாக்டர் எம். எஸ். கிருஷ்ணன் அவர்களின் கருத்து. நீர்ப்பாசன — மின்விசை மந்திரி டாக்டர் கே. எல். ராவ் அவர்கள் இக்கருத்தை ஆதரிக்கவில்லை. எனினும் இனி தட்சிண பீடபூமியில் அணைகள் கட்டும் போது பூகம்பம் ஏற்படக்கூடிய சாத்தியக்கூறுகளையும் கருத்தில் கொள்ள வேண்டும் என்கிறார் அவர். கொய்னாவில் மட்டுமின்றி, சென்னை உள்பட மிகவும் எட்டியுள்ள இடங்களிலும் பூகம்பத்தின் இலேசான வீச்சு இருந்தபடியால் கொய்னா அணைக்கட்டுதான் விபத்துக்குக் காரணம் எனக் கருதுவதற்கில்லை. இது விஷயமாக நியமிக்கப்பட்டுள்ள நிபுணர் குழு பூகம்பத்தின் காரணத்தைத் தெளிவாகக் கண்டு பிடித்து, எதிர்கால ஜாக்கிரதைக்கு வழி கூறும் என்று நம்புகிறோம்.

நம் நாட்டில் தருமத்தின் அடிப்படையிலும் இயற்கை உற்பாதத்துக்குக் காரணம் கூறுவர். நாட்டில் அதருமம் ஓங்கும்போது இயற்கை சீற்றமுற்று வெள்ளம், பூகம்பம், பஞ்சம் முதலியன ஏற்படும் என நீதி நூல்கள் கூறுகின்றன. இந்தியாவில் நீதியும் தருமமும் மானுடப் பண்புகளும் ஆட்டம் கண்டு வருவதை அழுத்தமாக எடுத்துக் காட்டி, மக்களை நல்வழியில் திருப்புவதற்கேதான் பூமியிலும் ஆட்டம் கண்டதோ என்னவோ? நாடு முழுவதும் செய்யப்படும் பாபங்களுக்குப் பிராயச்சித்தமாகவே ஒரு சிலர் பிராணத் தியாகம் செய்திருக்கிறார்களோ என்னவோ? நாம் தரும வாழ்வையும் சேவை மனப்பான்மையையும் மேற்கொள்வதே எதிர்கால உற்பாதங்களைத் தடுக்கும் முக்கியமான நடவடிக்கை என்பதைத்தான் இடிபாடுற்ற கொய்னாவில் இம்மியும் சேதமுறாமல் நின்று அகதிகளுக்குப் புகலிடம் தரும் ஆஞ்சநேயனின் ஆலயம் உணர்த்துகிறதோ?

# தெள்ளு தமிழுக்கு வெள்ளி விழா

தமிழ் நாட்டில் கச்சேரி மேடைகளில் தமிழ்ப் பாட்டுக்களுக்கு உரிய இடம் இல்லா திருந்த சூழ்நிலையில்தான் ராஜா சர் அண்ணாமலைச் செட்டியார் அவர்களின் பேரா தரவில் தமிழ் இசைச் சங்கம் தொடங்கப் பட்டது. ராஜாஜி, ரசிகமணி டி. கே. சி. பேராசிரியர் கல்கி, சர் ஆர். கே. சண்முகம் செட்டியார் ஆகியவர்கள் உரம் ஊட்டி வளர்த்தனர் தமிழ் இசை இயக்கத்தை. தொடக்கத்தில் எவ்வளவோ எதிர்ப்புக்கள் இருந்தன. ஆயினும் இயக்கம் வென்றது.

தமிழிசை இயக்கத்துடன் ஒன்றிவிட்ட ராஜா சர் அண்ணாமலைச் செட்டியார் அவர் களின் பெயரில் உருவான மகத்தான சொந்த மணி மன்றத்தில் தமிழிசைச் சங்கம் இப் போது உயரிய இசை நிறுவனமாகச் செய லாற்றி வருகிறது. தமிழிசைக் கல்லூரி ஒன்று நற்பணியாற்றி வருகிறது. பேரறி ஞர்கள் பண் ஆராய்ச்சி செய்தும், மற்றும் பல வகைகளிலும் தமிழ் கண்ட தொல் கலையின் பெருமைகளை உலகறியச் செய்து வருகின்றனர். ஆயினும் தமிழிசை இயக்கத் தின் வெற்றி தமிழிசைச் சங்கம் என்ற நிறுவனத்துடன் நின்றுவிட்டதாகச் சொல்வ தற்கில்லை. வித்வான்களும், நிபுணர்களும், மற்ற இசை நிறுவனங்களும் காலக்கிரமத்தில் இயல்பாகத் தமிழுக்கு உரிய இடத்தை இசை மேடைகளில் தந்ததிலேயே தமிழிசை இயக் கத்தின் உண்மையான வெற்றி உள்ளது எனலாம்.

இசை என்பது மொழி கடந்தது எனினும் மொழியிலும் பெறப்படுகிறது — இறைவன் உருவற்றவன் எனினும் திவ்விய மூர்த்தங் களாக எழுந்தருளியிருப்பது போல். தேவார மும் திவ்யப் பிரபந்தமும் பிறந்த தமிழ் நாட்டில் இசையும் மொழியும் இரண்டறக் கலந்து விட்டவை. கோபாலகிருஷ்ண பாரதி யார், அருணாசலக் கவிராயர், முத்துத் தாண் டவர், ராமசுவாமி சிவன், கோடீசுவரய்யர், பாபநாசம் சிவன் முதலிய தலைசிறந்த வாக் கேயகாரர்கள் அமுதத் தமிழில் அற்புத மான இசை வளம் கொழிக்கும் பாடல்களை ஆக்கித் தந்துள்ளனர். எனவே, தமிழுக்கு இசையில் இடமில்லை என்பதை ஒருகாலும் ஏற்பதற்கில்லை. ஆனால் அதேபோதில் தெலுங்கு, சம்ஸ்கிருதம், கன்னடம் முதலிய மற்ற மொழிகளில் மகான்கள் அளித்துள்ள பாடல்களுக்கு நம் இசை மேடைகளில் இடம் தராமற் போனால் அது சங்கீத அநுபவத்துக் கும், சங்கீத சாஸ்திர ஞானத்துக்கும் நல்ல தல்ல என்பதையும் கூற வேண்டும்.

வெள்ளி விழாக் கொண்டாடும் தமிழிசைச் சங்கம் தனது இலட்சியத்தை எய்திவிட்டது என்பதற்கு இசை மேடை எங்கும் எழும்பும் தமிழ் முழக்கமே போதிய சான்றாகும். அதுவே தமிழிசைச் சங்கத்துக்கு வாழ்த்தும் பாராட்டுமாகும்.

தமிழிசை இயக்கத்தைத் தொடங்கி வைத்த ராஜாஜி அவர்களே வெள்ளி விழா வையும் தொடங்கி வைப்பது வெகு வெகு பொருத்தமாகும். முதலமைச்சர் என்பதோடு கலையுலகிலும் பெயர் கொண்ட திரு அண்ணா துரை அவர்கள் வெள்ளி விழாவுக்குத் தலைமை தாங்குகிறார். கல்வி அமைச்சர் நாவலர் நெடுஞ்செழியன் அவர்கள் வெள்ளி விழா மலரை வெளியிடுகிறார். நாயன்மார் களையும், ஆழ்வார்களையும் போல் 'தமி ழோடு இசை பாடல் மறந்தறியாத' திரு முருக கிருபானந்தவாரியாருக்குத் தமி ழிசைச் சங்கம் இசைப் பேரறிஞர் என்ற விருதைச் சூட்டுகிறது. இவ் வெள்ளி விழா இனி நிகழவிருக்கும் பொன் விழா, மணி விழா, முத்து விழா யாவற்றுக்கும் கட்டியம் கூறுவதாக அமையட்டும்.

# மகான் மறைந்தார்!

'பிரவசனம் புரிபவர்களுக்கு வழி காட்டி' — பிரவசன மார்க்கதரிசி — என்று ஸ்ரீ காமகோடி ஜகத்குரு அவர்களால் விருத ளிக்கப்பெற்ற மகான் மாயூரம் பிரம்மஸ்ரீ சிவராமகிருஷ்ண சாஸ்திரிகள் பரமபதி சேர்ந்து விட்டார்கள். அவரது மறைவுக்கு 'ஈடு செய்ய முடியாத நஷ்டம்' என்ற சொற் றொடரின் முழுப் பொருளும் பொருந்தும். பிற விஷயங்களில் இம்மியும் பேச்சைத் திருப் பாமல் பகவத் குணங்களில் ஆழ்ந்து திளைத்து அதனைச் சுவைத்துச் சுவைத்து, பாகவதமும் ராமாயணமும் கூறிவந்த அந்தப் பரம பக்த ரின், ஞானியின், செஞ்சொற் செல்வரின் ஸ்தானத்தை யார் பூர்த்தி செய்ய இயலும்?

கல்விக் கடலாக விளங்கிய மன்னார்குடி ராஜு சாஸ்திரிகளின் கடைசிக் காலத்தில் அவரிடம் பயின்ற சிவராமகிருஷ்ண சாஸ் திரிகள் கல்வியின் பயன் பக்தி என்பதை அநுபவபூர்வமாகக் கண்டவர். வால்மீகி ராமாயணத்திலும் சுகாசாரியரின் பாகவதத் திலும் மூழ்குளித்து முத்தெடுத்தவர். அந்த முத்துக்களை உலகுக்கெல்லாம் அளித்தவர். காலம் தப்பாமல் அவர் சபைக்கு வந்து, சுற்றுச் சூழ்நிலையை அறவே மறந்து, தாம் எடுத்துக் கொண்ட விஷயம் ஒன்றிலேயே ஊறி, அதிவேகமாகச் சொற்களைப் பொழிந்து உபந்நியசிக்கும் பாங்கு அவர் ஒருவருக்கே உரியது. ஒரு விநாடி அசதி மறதியாக இருந் தாலும் ஒருசில ரத்தின மணிகளை இழந்து விடுவோம். அவருக்கு விஷயத்தில் உள்ள ஈடு பாடு நமக்கும் இருந்தால்தான் அவரைப் பின் பற்ற முடியும். தரக்குறைவான ஹாஸ்யத்

தையோ, கிளைக் கதைகளையோ, 'பாலிடிக்'ஸையோ அவரது உபந்நியாசத்தில் காணவே முடியாது. சாஸ்திரங்களைக் கரைத்துக் குடித்தவராயினும், அவற்றையும் கூட அவர் பகட்டாகத் தமது பிரவசனத்தில் காட்டவே மாட்டார். புலமையை இப்படிக் கட்டுப்படுத்திக் கொண்ட பேரதிசயத்தை வியக்காமல் இருக்க முடியாது.



தனி வாழ்வில் பரம உத்தமராக விளங்கியவர் அவர். அவரைப் பொறுத்தமட்டில் ராமாயணமும் பாகவதமும் மேடையோடு நின்றுவிடவில்லை. அவர் வாழ்வில் ஒவ்வொரு விநாடியும் அவை உடனிருந்து உரையாடின. குழந்தையாக வாழ்ந்தவர் அவர். வினயத்தின் இருப்பிடம். அன்பே உருவானவர். பொருளாசையும் புகழாசையும் இம்மியும் பற்றாதவர். ஆசாரமும் அனுஷ்டானமும் மிக்கவர். தாம் பிறந்த தேவங்குடியில் இந்திரபுரீசுவரப் பெருமானுக்கு ஆலயம் புதுக்கிப் பார்த்து உள்ளம் நிறைந்தவர்.

மார்க்கதரிசி மறைந்துவிட்டார். ஆனால் மார்க்கம் இருக்கிறது. அதில் செல்லக் கூடிய பக்குவமும் பக்தியும் வாக்கு வன்மையும் படைத்த புதிய பிரவசனகர்த்தர்களை சாஸ்திரிகளின் புனித உதாரணம் தூண்டிவிடுமாக!

# மகாஜன் மறைந்தார்!

சுதந்திர பாரதத்தின் டில்லி உயர்நீதி மன்றத்தில் முதல் பிரதம நீதிபதியாகப் பணியாற்றிவிட்டு ஓய்வுபெற்ற திரு மகாஜன் அவர்கள் காலமான செய்தி கேட்டுத் துணுக்குற்றோம். அவர் வழக்கறிஞராக இருந்து பிறகு பஞ்சாப் நீதிபதியாகி, அதன்பின்னர் டில்லி உயர்நீதி மன்றத்தில் இடம் பெற்றுத் தமது சட்ட அறிவை நிலை நாட்டினார். ஜம்மு — காஷ்மீர் பாரதத்துடன் இணைந்தவுடன் சிலகாலம் அங்கு பிரதம மந்திரியாகவும் பணியாற்றினார். பஞ்சாப் சர்வ கலாசாலையின் வளர்ச்சியில் முக்கியமான பங்கெடுத்துக் கொண்டவர். பாரதத்தில் ராஜ்யங்களுக்குச் சுயாட்சி உரிமைகள் அதிகமாக அளிப்பதற்குப் பதிலாகப் பலமான மத்திய ஆட்சி கொண்ட நிர்வாக முறையே ஏற்றது என்று பல காலம் வாதாடி வந்தார். மகாராஷ்டிர — மைசூர் எல்லைத் தகராறைத் தீர்க்க நியமிக்கப்பட்ட ஒரே அங்கத்தினர் கொண்ட கமிஷனாக திரு மகாஜன் சிறப்புப் பணி புரிந்தார். பெல்காம் மைசூருக்குச் சேர வேண்டியது தான் என்று உறுதியாகத் தெரிவித்தார். அவருக்கு மகாராஷ்டிரத்தில் எத்தகைய எதிர்ப்பும், கிளர்ச்சியும் ஏற்படும் என்பது தெரியாததல்ல. ஆயினும் தமக்கு நியாயம்என்று தோன்றியதைத் தெரிவித்தார். இதுதான் அவர் கடைசியாக ஏற்றிருந்த பொதுப் பணி.



நல்ல சிந்தனையாளரும், பாரபட்சமற்ற நீதி விற்பன்னருமான ஒருவரை மகாஜன் அவர்களின் மறைவில் பாரதம் இழந்துவிட்டது.

# என்ன சேதி?

## இலக்கிய வட்டம்

சென்னை அரசாங்கத்தைச் சேர்ந்த அதிகாரிகளில் நல்ல தமிழ் இலக்கிய ஆர்வம் படைத்தவர்கள் இருக்கிறார்கள் என்ற இரகசியம் இப்போது வெளிப்பட்டு விட்டது. சென்ற ஓராண்டு காலமாக இவர்கள் 'இலக்கிய வட்டம்' ஒன்று அமைத்து அவ்வப்போது இலக்கிய விஷயங்களை அளவளாவி வந்திருக்கிறார்கள். இப்படியொரு இலக்கிய வட்டம் நடத்த வேண்டும் என்ற ஆர்வத்தை ஊட்டியதும், முன்மாதிரியாக விளங்கியதும் அந்நாட்களில் ரசிகமணி டி.கே.சி. திருநெல்வேலியில் நடத்தி வந்த வட்டத் தொட்டிக்

கூட்டங்களேயாகும் என்று சொல்கிறார்கள். இவர்கள் ஓராண்டு காலம் சிறப்பாக நடத்திய இலக்கிய வட்டக் கூட்டங்களுக்குச் சிகரம் வைத்தாற் போல் வருகிற 30, 31 தேதிகளிலும், புது வருடம் 1ம் தேதியிலும் ஆக மூன்று நாட்கள் சென்னை ராஜேசுவரி கல்யாண மண்டபத்தில் ஆண்டு விழா நடத்தத் திட்டமிட்டிருக்கிறார்கள். இந்த மூன்று நாள் வைபவத்தை மதுரை பல்கலைக் கழகத் துணைவேந்தர் திரு தெ. பொ. மீனாட்சிசுந்தரனார் தொடங்கி வைக்கிறார். அமைச்சர் திரு நெடுஞ்செழியன், திரு பி. ஜி. கருத்திருமன், திரு சா. கணேசன், திரு கி. வா. ஜகந்நாதன், பேராசிரியர் அ. சீநிவாசராகவன், திரு நா. மகாலிங்கம் ஆகியோரும், மற்றும் பல தமிழ்ச் சுவை கண்ட அதிகாரிகளும், எழுத்தாளர்களும், கவிஞர்களும், புலவர்களும் இம்மூன்று நாட்களிலும் நடக்கவிருக்கும் பேச்சுக்களிலும், பட்டி மன்ற விவாதங்களிலும், கவியரங்கிலும் கலந்து கொள்ளப் போகிறார்கள். தமிழ் இலக்கிய ஆர்வம் படைத்த சென்னை வாசிகளுக்கு ஓர் அரிய இலக்கிய விருந்தாக இலங்கப் போகிறது இவ்விழா.

## ஷேக் அப்துல்லா விடுதலை

விசாரணை யின்றியே பதினைு ஆண்டுகளாகச் சிறை வைக்கப்பட்டிருந்த ''காஷ்மீர் சிங்கம்'' திரு ஷேக் அப்துல்லாவை விடுதலை செய்து, அவர் மூலம் காச்மீரப் பிரச்னைக்குத் தீர்வு காண முயல வேண்டும் என்பது நமது நாட்டில் பல்லோரின் கருத்து. சமீபத்தில் மக்கள் சபை அங்கத்தினர் பலர் ஷேக் அப்துல்லாவை விடுதலை செய்ய வேண்டும் எனக் கோரிக் கையெழுத்திட்டுத் தில்லி அரசாங்கத்துக்கு மகஜர் அனுப்பினார்கள். தில்லி அரசாங்கம் முதலில் விடுதலை செய்வதாகக் கூறி, பின்னர் அவர் நடமாட்டங்களில் ஏதோ கட்டுப்பாடுகள் விதித்தது. இது அரசாங்கத்தின் தகுதிக்கோ ஷேக் சாகிப் அவர்களின் மதிப்புக்கோ சற்றும் பொருத்தமாக இல்லை என்று அறிஞர் பலர் கருதினர். இந்த மாதக் கடைசிக்குள் எல்லாக் கட்டுப்பாடுகளையும் நீக்கி ஷேக் அப்துல்லா அவர்களைச் சுதந்திரமாக இயங்க அநுமதிப்பார்கள் என்று வதந்தி உலவுகிறது. அவர் விடுதலை காச்மீரப் பிரச்னைக்கும் ஒரு விடுதலையாகத் திகழ வேண்டுட என்று விரும்புகிறோம்.

## சத்குரு விழா

இவ்வருட மியூஸிக் அகாடமி கச்சேரித் தொடருக்குத் தனியானதொரு சிறப்பு உள்ளது. கர்நாடக சங்கீதம் என்று எண்ணிய அளவில் நம் கண் முன் தோன்றும் சத்குரு தியாகராஜ சுவாமிகளின் இருநூறாவது ஜயந்தி விழாவாக அமைகிறது இவ்வாண்டு அகாடமியின் கச்சேரித் தொடர். இவ்வருஷம் சங்கீத கலாநிதியாக எந்த ஒரு வித்துவானையும் கௌரவியாமல், தியாகராஜரையே கௌரவித்து, ஸீஸனில் ஒவ்வொரு நாளும் பழைய சங்கீத கலாநிதிகளில் ஒருவர் தலைமை தாங்குகிறார். அகாடமிக் கச்சேரிகளிலும் சுவாமிகளின் கிருதிகளுக்கே முக்கியத்வம் தரப்படுகிறது. காது குளிர, மனங் குளிர அய்யர்வாளின் அமர கீதங்களைக் கேட்டு மகிழ்வோம்.

## புதிய ஷெரீப்

சென்னை ஷெரீப்பாக 'சித்ரா' ஸ்ரீ நாராயணசுவாமி அவர்கள் நியமிக்கப்பட்டிருக்கிறார் என்ற செய்தியைக் கேட்டு மகிழ்ச்சியடையாதவர்கள் இடையாது. அவர் பலப் பல தொழில் நிறுவனங்களுடன் நெருங்கிய



தொடர்பு கொண்டவர். பல தொழில் நிறுவனங்களைத் தமிழகத்தில் தோற்றுவிக்கப் பெரு முயற்சியும் ஊக்கமும் அளித்தவர். ஐரோப்பா, அமெரிக்கா, ஜப்பான் ஆகிய பல நாடுகளில் சுற்றுப் பிரயாணம் செய்து அந்நாடுகளில் உள்ள பல தொழிலதிபர்களின் தொடர்பையும் நேசத்தையும் மதிப்பையும் பாராட்டையும் பெற்றவர். இந்தியத் தொழில் துறை, பங்கு மார்க்கெட் ஆகியவற்றில் நல்ல செல்வாக்குப் பெற்றவர். 'சித்ரா' கம்பெனி அதிபரானபடியால் 'சித்ரா நாராயணசுவாமி' என்றே அழைக்கப்படும் அவர், நல்ல அறிஞர். எழுத்தாற்றலும், பேச்சுத் திறனும் மிக்கவர். இனிமையாகப் பழகுபவர். உயர்ந்த சீலம் பொருந்தியவர். சுதந்திரக் கட்சியின் முக்கியஸ்தராக அரும் பணி ஆற்றிவருகிறார். அவரை ஷெரீப் பதவிக்கு நியமித்துச் சென்னை அரசாங்கம் வெகு சுலபமாக நல்ல பெயரைத் தட்டிக் கொண்டு விட்டது!



## கிறிஸ்துமஸ் கோலாகலம்

உலகெங்கும் கிறிஸ்துமஸ் கொண்டாட்டம் விமரிசையாக நடக்கிறது. மகிழ்ச்சியும் குதூகலமும் பொங்கும் இந்த நன்னாளில் இரவெல்லாம் பகலாகி ஒளிரும், மேனாட்டுப் பெரிய நகரங்களிலே. அமெரிக்காவில் அலங்கார விளக்குகளால் ஒரு பிரதான கடைவீதி ஜொலிப்பதையும், கிறிஸ்துமஸ் வாணவேடிக்கைகளை அன்னையும், மகனும் கண்டு களிப்பதையும் இங்கு பார்க்கிறோம்



# பிரம்மா- விசுவாமித்திரர்- ராஜாஜி



சேங்காலிபுரம் பிரம்மஸ்ரீ அனந்தராம தீக்ஷிதர்

மகரிஷிகளுக்கு ஒப்பான ஸ்ரீ ராஜாஜி அவர்கள் காயத்ரியைப் பற்றி எழுதியதை (''சூரிய பகவானிடமிருந்து சக்தி பெறுவோம்'' — கல்கி, டிசம்பர் 10, 1967) பார்த்து அளவுகடந்த ஆனந்தம் அடைந்தேன்.

காயத்ரி மூன்று பாதங்கள். ஒவ்வொரு வேதத்திலிருந்து அதன் சாரமாக ஒவ்வொரு பாதத்தைப் பிரம்ம தேவன் கூறினார். இந்த மஹாமந்திரம் மங்கிப் போய்விடுமோ என்று கவலைப்படும் காலத்தில் உபநயன சம்ஸ்காரம் உள்ளவர்களுக்கு இந்த மந்திரத்தின் மகிமையை மஹாமுனிவரான விசுவாமித்திரர் எடுத்துக் காட்டி உபதேசித்தார்.

அதற்குப் பின்பு இந்தக் கலியுகத்தில் இந்த மந்திரம் மங்கிவிடுமோ எனக் கவலைப்படும் காலத்தில் விசுவாமித்திர முனிவர்போல் ஸ்ரீ ராஜாஜி இம் மந்திரத்தை எடுத்து உபதேசித்துள்ளார். இதனால் உலகத்திற்கு ஏற்படும் பயனை அளவிட முடியாது. ஆயிரம் பசுக்களை ஒருவன் வைத்துக் கொண்டு பாதுகாத்தானாகில் அவைகளிடமிருந்து கிடைக்கும் பாலைப் பல ஆயிரம் பேர்கள் பருகுவார்கள். அதைப் போல் காயத்ரியைச் சில பேர்கள் ஜபிப்பதால் உலகில் உள்ள பல கோடி மக்களை அது பாதுகாக்கும். இந்த மந்திரத்தால் ஸ்ரீ பகவான் வேண்டப்படுகிறார். அந்த பகவானின் உருவமே சூரியன். இதையும் ஸ்ரீ ராஜாஜி ''பிரத்யட்சம் பிரம்ம'' எனக் கூறியுள்ளார்கள்.

இடையர்கள் கபடு சூதற்றவர்கள். அதே போல் பெண்களும். அப்படிப்பட்டவர்கள்கூட சூரியனை பகவான் எனக் கருதுகின்றனர் என வேதத்தில் உள்ள ஸ்ரீ ருத்ரம் கூறுகிறது. இரவில் பசுக்களைப் பாதுகாக்கும் இடையர்கள் உதயமான பிறகு காட்டில் படுத்துத் தூங்குவார்கள். தூங்குவதற்குமுன்பு இனி பகவான் பசுக்களைப் பாதுகாப்பான் எனக் கூறிப் படுப்பார்களாம். அதே போல் வெகு தூரத்துக்கு அப்பால் உள்ள ஜலத்தைக் கொண்டு வருவதற்காக ஸ்திரீகள் ஒன்றுகூடிச் சேர்ந்து உதயகாலத்தை எதிர்நோக்கி இருப்பார்கள். இருட்டில் போனால் துஷ்ட மிருகங்களின் சஞ்சாரம் இருக்குமாதலால் உதயம் ஏற்படும்போதுதான் புறப்படுவார்கள். புறப்படும் போது 'பகவான் உதயமாகி விட்டான். இனி கவலை இல்லை' எனக் கூறிப் புறப்படுவார்கள். இதனைக் கூறும் மந்திரமாவது:

**உதைனம் கோபா: அத்ருசன்**
**அத்ருசன் உதஹார்ய:**
**உதைனம் விச்வா பூதானி**
**ஸத்ருஷ்டோ ம்ருடயாதி ந:**

இவ்வாறே எல்லாப் பிராணிகளும் சூரியனைத் தெய்வமெனக் கருதுகின்றன. அவனைத் தெய்வமென நினைத்துப் பார்த்தால் அவன் துக்கத்தைப் போக்கிச் சுகத்தை அளிப்பான் என்றும் வேதமந்திரம் கூறுகிறது.

இப்படிப்பட்ட கருத்துக்களைக் கொண்ட காயத்ரி மஹாமந்திரத்தின் உட்பொருளை ஸ்ரீ ராஜாஜி அவர்கள் எழுதிய ஆனந்தத்தை மனத்தில் வைத்துக் கொள்ள முடியாமல் சபையிலும் மற்றவர்களிடமும் சொல்லி மகிழ்கிறேன். தங்களுக்கும் எழுதினேன். இப்போது தேசத்துக்கு வந்திருக்கும் பலவித கஷ்டங்களைப் போக்க ராணுவத்தாலும்கூட முடியாது. ஸ்ரீ காயத்ரி மஹாமந்திரத்தை ஜபிப்பதுதான் எல்லோர் மனத்திலுமுள்ள தோஷங்களை விலக்கி அவர்களை நல்லவர்களாக ஆக்கும். இதை ஸ்ரீ ராஜாஜி சொன்னால்தான் உலகம் கேட்கும். வேறு யார் சொன்னாலும் எல்லோரும் கேட்க மாட்டார்கள். அதனால்தான் ஸ்ரீ பகவான் இவர்களை இவ்வாறு உபதேசிக்கும்படி செய்துள்ளார்.

# ராஜாஜியின் கருத்துக்கள்

இந்தியாவின் ஐக்கியத்துடன் இணைந்து விட்டது ஆங்கில மொழி. இப்படிச் சொல்வது விந்தையாகத் தோன்றலாம். ஆனால் இதுவே உண்மை. இதில் அவமானம் எதுவுமில்லை. நமக்குப் பல மொழிகளும் பல இலக்கியங்களும் இருப்பதால், இவற்றுக்குள் பாரபட்சம் கூடாதென்று ஆங்கிலத்தை உதவிக்கு அழைத்துக் கொள்வதில் அவமானம் ஏது? நூற்றாண்டுகளுக்கு மேலாக நம்முடனிருந்து, நம்மை ஐக்கியப்படுத்தி, நமக்கு நவீன அறிவு நூல்களில் ஞானம் தந்து, நம்மிடை சுதந்திர உணர்ச்சியைத் தோற்றுவித்த ஆங்கிலத்தை விடாமல், நன்றியுடன் தொடர்ந்து பயன்படுத்தி, அதனால் உபயோகம் பெறுவதில் அவமானம் எதுவுமில்லை.

ஒவ்வொரு ராஜ்யத்திலும் உள்ள அரசாங்கமும் மக்களும் அந்தந்தப் பிரதேச மொழியினால் தொடர்பு கொள்கின்றனர். ஆங்கிலத்தை வைத்துக் கொள்வதால் இது மாறிவிடப் போவதில்லை. ஹிந்தியை மத்திய ஆட்சி மொழியாக்குவதால் ஹிந்தி பேசாதோருக்கும் மத்திய சர்க்காருக்குமிடையே எவ்விதமான மொழி ஐக்கியமும் உண்டாகப் போவதில்லை. ஒரு பிரதேச மொழியை மற்றப் பிரதேச மொழிகளின் மீது திணிப்பதால் மக்களின் பண்பாடும், முன்னேற்றமும், க்ஷேமமும் வளரா; அறிஞர் சமூகத்தைச் சார்ந்ததே இப்பண்பாடும் முன்னேற்றமும் க்ஷேமமும். இந்தியாவின் அறிஞர் சமூகம் ஆங்கிலத்தினால்தான் ஒருமைப்பாடு பெற்றுள்ளது. இச் செல்வத்தை இழப்பது மடமை.

கல்வியிலிருந்து ஆங்கிலத்தை அகற்றுவதால் ஆங்கிலத்துக்கு நஷ்டமில்லை; நாட்டின் இளைஞர் யாவரும் நஷ்டத்துக்கு ஆளாவர் ; தமிழ் நாட்டு மக்கள் மட்டுமல்ல. ஆங்கில ஞானம் பெற்றவர்கள் பலவித அநுகூலங்களைப் பெறுவர் என்றும், ஆங்கிலத்தைத் துவேஷித்துத் தூர எறிந்தவர்கள் படிப்புக்கும், உத்தியோகத்துக்கும் நாடெங்கும் பெயர்வதில் மகத்தான சிரமங்களைப் பெறுவர் என்றும் நிச்சயமாகக் கூறலாம். இந்தியா ஒரு பெரிய நாடு. ஆனால் இதற்குள் எல்லா இடத்துக்கும் பெயர முடியாமல் மொழியால் தடை எழுப்பிக் கொள்ளும் எந்த ஒரு பகுதியும் முன்னேற முடியாது. ஹிந்திப் பகுதி இளைஞர்கள் ஆத்திரத்தை விட்டு, தவறான வழிகாட்டுபவர்களின் செல்வாக்கிலிருந்து விடுபட்டால் இதை எளிதில் உணர்வார்கள். ஆங்கிலம் முக்கியத்துவம் பொருந்திய சர்வதேச மொழி என்பதையும் யாருமே புறக்கணிக்க இயலாது.

ஒரு தரப்பினர் ஹிந்தியை உறுதியாக எதிர்த்து, இன்னொரு தரப்பினர் அதே போல் ஹிந்தியை உறுதியாக ஆதரித்து வருகையில், பிரச்னையைத் தீர்க்க ஒரே வழி ஆங்கிலம்தான். இல்லாவிடில் அறிவிலும் உணர்ச்சியிலும் இந்தியா பிளவுபடும். எனவே அரசியல் ரீதியிலும் பிளவுபடும். இதை அறிவுடைய எவரும் வரவேற்க முடியாது.

ஆட்சிமொழி மசோதா எதிர்காலத்தில் ஒரு நாள் ஹிந்தியை ஏற்கிறபடியால் அதற்கென இப்போதிருந்தே ஏற்பாடு தொடங்க வேண்டியிருக்கும். ஆங்கிலத்தின் இடத்தில் ஹிந்தியை அமர்த்தக்கூடாது என்போருக்கு இம்மசோதா திருப்தி தரவே முடியாது. அதே சமயத்தில் அரசியல் சாஸனத்தில் சொன்னபடி ஹிந்திக்கு இப்போதே ஆட்சி மொழி ஸ்தானம் தர வேண்டும் என்பவர்களும் மசோதாவைப் பலமாக எதிர்க்கிறார்கள். சாஸனத்தில் ஹிந்திக்கு ஸ்தானம் பெற்றுத் தருவதில் அவர்கள் அரசியல் நிர்ணய சபையில் பெற்ற வெற்றியை இப்போது இழக்க விரும்பவில்லை.

இவ்வாறு இருதரப்புக்கும் அதிருப்தியாக உள்ள மசோதாவைக் கட்சிக் கொரடா பிரயோகித்து நிறைவேற்றி விடுவதால் என்ன நன்மை விளைந்துவிடும்? ஹிந்தி ஆட்சிமொழியானால்தான் தங்களுக்கு நன்மை எனக் கருதும் இளைஞர்களின் உணர்ச்சிகள் கட்டுக்கடங்காமல் பெருகும்; ஒழுங்கீனங்கள் அதிகரிக்கும்; கடைசியில் அரசாங்கம் பலாத்காரத்துக்கு அடிபணிய வேண்டியிருக்கும் : அல்லது தவறான வழியில் செலுத்தப்படும் அறியாத இளைஞர்களின் மீது சட்டப்படி வன்செயல் மேற்கொள்ள வேண்டியதாகும்.

எனவேதான், மொழி மசோதாவை இப்போது வாபஸ் பெற வேண்டும், தேசத்தின் உணர்ச்சி நிலை சீராகும் வரையில் சாஸனத்திலுள்ள ஆட்சி மொழிப் பகுதியின் அமலைத் தள்ளி வைப்பதற்குப் பார்லிமென்டின் அநுமதி பெற வேண்டும் என்று பிரதமருக்குத் தெரிவித்துக் கொள்கிறேன். தேசத்தில் உணர்ச்சிக் கொந்தளிப்பு அடங்கியபின் ஓர் அகில இந்திய மாநாடு கூட்டி மொழிப் பிரச்னையை அமைதியான சூழ்நிலையில் மீண்டும் ஆலோசிக்க வழி செய்யவேண்டும் என்றும் கேட்டுக்கொள்கிறேன்.

ஆங்கில நீடிப்பை வலுவாக ஆதரிப்பவன் நான் என்பதால் என் யோசனை புறக்கணிக்கப்படலாம். ஆனால் அந்தரங்கசுத்தத்துடன், நாட்டின் நலனைக்கருதியே இந்த யோசனையை அளிக்கிறேன்.

---

### ஒரு திருத்தம்

டிசம்பர் 10ந் தேதி 'கல்கி' இதழில் இருபதாம் பக்கம், முதல் பாராவில், ''சூரிய பகவானிடமிருந்து சக்தி பெறுவோம்'' என்ற ராஜாஜியின் கட்டுரையில், ''தியானத்துக்குரிய சூரிய பகவானுடைய ஒளி **என்** உள்ளத்தில் புகுந்து **என்** சிந்தனைகளைத் தூண்டி விடுவதாகுக'' என்று இருப்பதை, ''தியானத்துக்குரிய சூரிய பகவானுடைய ஒளி **எங்கள்** உள்ளத்தில் புகுந்து **எங்கள்** சிந்தனைகளைத் தூண்டி விடுவதாகுக'' என்று திருத்திக் கொள்ளவும். தனக்கு மட்டுமின்றி, பிரபஞ்சம் முழுவதற்குமாகச் செய்யப்படும் பிரார்த்தனை காயத்ரி என்பது இதிலிருந்து தெளிவாகும்.

— **ஆசிரியர்.**

# 'கல்கி' நினைவு விழா

முத்தமிழ் வளர்த்த வித்தகர்; மூன்றெழுத்தால் தமிழ்கூறும் நல்லுலகம் எல்லாம் தம் பெயரை நிலைநாட்டிக் கொண்டவர்; 'கல்கி' எனும் பெயர் புனைந்து நவீன தமிழ் இலக்கியத்துக்கு ஒரு புதிய சகாப்தத்தை ஏற்படுத்தியவர். ரா. கிருஷ்ணமூர்த்தி அவர்களின் நினைவு நாள் சென்ற 3ந் தேதி 'கல்கி நுண்கலைச் சங்க'த்தாரால் கொண்டாடப் பெற்றது. அமைச்சர், கலைஞர் மு. கருணாநிதி அவர்கள் தலைமை தாங்கினார். எழுத்தாளர்கள் பலர் 'கல்கி'யவர்களின் வன்மை மிகுந்த எழுத்தாற்றலையும் சிறப்பியல்புகளையும் எடுத்துக் கூறினார்கள். அதோடு 'கல்கி'யின் பெயரால் எழுத்தாளர் சங்கத்துக்கு ஒரு மண்டபம் கட்ட அரசாங்கத்தின் ஒத்துழைப்பு வேண்டும் என்றும் கேட்டுக் கொண்டனர்.

இதுகுறித்து யோசித்து ஆவன செய்வதாக வாக்களித்த அமைச்சர் திரு கருணாநிதி, எழுத்தின் சக்தியைப் பற்றிக் கூறி, அதனைக் கீழ்த்தரமாக்கி நாராசமாக்கும் எழுத்தாளர்களை எழுத்தாளர் சங்கம் மூன்று முறை எச்சரிக்க வேண்டும் என்றும், அவர்கள் அப்படியும் கட்டுப்படாவிடில் எழுத்துலகிலிருந்து விலக்க வேண்டும் என்றும், எழுத்தாளர் சங்கத்தின் அலுவல்கள் அத்தகைய தரத்துக்கு உயருமானால் தமிழின் பெருமை தரணியெங்கும் ஓங்கும் என்றும் கூறினார்.

ஆசிரியர் 'கல்கி' அவர்கள் எப்படி எழுதினார், எத்தகைய எழுத்துக்கு ஆக்கம் அளித்து வளர்த்தார் என்பவை நாடறிந்தவை. எத்தனையோ நினைவு மண்டபங்களை நிறுவிய 'கல்கி' அவர்களுக்கு, அவையே நினைவுச் சின்னமாகத் திகழும் என்றாலும், அவர் விரும்பிய தரம் மிகுந்த எழுத்துக்கள் நந்தமிழ் நாடெங்கும் நிலவுமானால், அதைக் கண்டே அவரது ஆத்மா நிறைவு பெறும்.

# அன்பு பிறந்த நாள்

ஆயிரத்துத் தொள்ளாயிரத்து அறுபத்தேழு வருஷங்களுக்குமுன் மாட்டுத் தொழுவத்தில் ஒரு குழந்தை பிறந்தது. அந்த எளிய குழந்தையைக் காண தேவதைகளும் வந்தன. மாகி என்ற மகான்களும் குழந்தையைத் தேடி வந்து பணிந்து பரிசுகள் வழங்கினர். உலகத்தின் ஆசாரிய புருஷர்களில் ஒருவரான இயேசுநாதரே அக்குழந்தை.

அன்று அந்தக் குழந்தை தோன்றிய நாள் இன்று ஆயிரத்துத் தொள்ளாயிரத்து அறுபத்தேழாண்டுகளுக்குப் பின்பும் குழந்தைகளுக்குத் திருநாளாக உள்ளது. கிறிஸ்துமஸ் தந்தையும் 'ஸாண்டக்ளா'ஸும் இயேசுபிறந்த நன்னாளையொட்டி இன்றும் குழந்தைகளுக்குப் பரிசு வழங்கிப் போகிறார்கள். அன்று தேவகுமாரனை ஈன்ற மேரி பெற்ற ஆனந்தத்தை இன்றும் கோடானு கோடி அன்னைகள் அனுபவிக்கிறார்கள்.

1967 ஆண்டுகளுக்கு முன் கொண்டாடப்பட்ட கிறிஸ்துவின் ஜனனத்தையும் இன்று கொண்டாடப்படும் கிறிஸ்து ஜயந்தியையும் இவ்விதம் அட்டையில் ஒருங்கே காண்கிறோம்.

### காமகோடியின் கருணைமொழி

சங்கீதக் கலை என்பது கொஞ்சம்கூடக் கஷ்டம் இல்லாமல் மோட்சத்தையே வாங்கிக் கொடுக்கக் கூடியது.



வீணை வாத்தியம் ஒன்றை வைத்துக் கொண்டு ஸ்வரசுத்தியோடு கலந்து வாசித்து ஆனந்தமயமாக இருக்கக் கற்றுக் கொண்டு விட்டால், யோகம் பண்ண வேண்டாம், தபஸ் பண்ண வேண்டாம், சுலபமாக மோட்சத்தையே அடைந்து விடலாம். கொஞ்சம் கூடச் சிரமம் இல்லாத வழி அது. ஸ்வரசுத்தியோடு சுத்தமான சங்கீதத்தைக் கற்றுக் கொண்டு அதையே ஈசுவரார்ப்பணம் பண்ணிவிட்டால் மோட்சத்தை அடைந்துவிடலாம்.

யோகத்துக்கும் தபஸுக்கும் இருப்பது போன்ற கட்டுப்பாடுகள் சங்கீதத்துக்கு இல்லை. அதோடு யோகி யோகம் செய்தால், தபஸ்வி தபஸ் செய்தால் அவர்களுக்கு மட்டுமே ஆத்மானந்தம் உண்டாகிறது. சங்கீதம் ஒன்றில்தான் அதைப் பயில்பவர் மட்டுமின்றிக் கேட்கின்ற எல்லோருக்குமே அதே அளவு ஆத்மானந்தம் உண்டாகிறது.

# கல்கி ஜனவரி 14 இதழில்

கொத்தமங்கலம் சுப்பு எழுதும்

# பொன்னிவனத்துப் பூங்குயில்



# ஸ்பென்ஸர் 'டீ' தான் சந்தேகமில்லை!

ஸ்பென்ஸர் 'டீ'யின் சுவையும், மணமும் தனிப்பட்டவை. தரத்தை விரும்புவோர் அனைவரும் கேட்டு வாங்குவது ஸ்பென்ஸர் தேயிலையைத்தான்.

ஸ்பென்ஸர் 'கிரீன்லேபல்' 'ரெட் பாண்ட்' மற்றும் 'பீகோ டஸ்ட்' ஆகியவை நீலகிரியின் உயர் மிகு சாரல்களில் பயிராகும் தேயிலை ரகங்கள்.

உங்கள் தேவைக்கேற்ப 100, 250 மற்றும் 500 கிராம் கார்டன்களில் கிடைக்கின்றன.

**ஸ்பென்ஸர் அண்டு கோ., லிமிடெட்**
சென்னை மற்றும் கிளைகள்







FDSST852

பேராசிரியர் லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார்

சென்னையில் 1943-ஆம் ஆண்டில் தோன்றிச் சீர்பெற வளர்ந்துவரும் தமிழ் இசைச் சங்கத்துக்கு இப்போது இருபத்து ஐந்து ஆண்டுகள் நிரம்புகின்றன. தமிழ் மக்களால் மறக்கப்பட்டு வீழ்ச்சியுற்றுக் கிடந்த தமிழ் இசைக்குக் காலஞ்சென்ற செட்டிநாட்டு அரசர் டாக்டர் ராஜா சர் அண்ணாமலைச் செட்டியார் அவர்கள் புத்துயிர் கொடுக்க முனைந்தும் முன்னின்று செயற்படுத்தியும் வெற்றி பெற்றார்கள். தமிழ் இசை இயக்கத்தினைத் தோற்றுவித்து, அதற்குத் தொடக்கக் காலத்தில் நேர்ந்த எதிர்ப்புக்களை யெல்லாம் இடையறாது பணி செய்து வென்றார்கள். 'தமிழ் நாடெங்கும் தமிழிசை முழங்க வேண்டுமென்பது எனது ஆவல்' என்று தம்முடைய உயர்ந்த உள்ளக்கிடக்கையினை வெளியிட்டுள்ள அவர்கள் சென்னையில் தமிழ் இசைச் சங்கம் நிறுவினார்கள். டாக்டர் ரா. க. சண்முகம் செட்டியார், டாக்டர் ராஜா சர் முத்தைய செட்டியார், திரு சி. இராசகோபாலாச்சாரியார், ரசிகமணி டி.கே. சிதம்பரநாத முதலியார், கல்கி கிருட்டிணமூர்த்தி, திரு சி. எஸ். இரத்தினசபாபதி முதலியார், திரு டி. எம். நாராயணசாமிப் பிள்ளை முதலியோர் அண்ணாமலை அரசர் அவர்களின் முயற்சிக்கு ஆதரவும் ஒத்துழைப்பும் நல்கினார்கள். தமிழ் இசை மணம் பரப்பும் தமிழ் இசைச் சங்கத்தின் வளர்ச்சி, எங்கு நோக்கினும் தமிழ் மணம் கமழும் இக்காலத்தில் தமிழக வரலாற்றில் பொன்னெழுத்துக்களால் பொறிக்கத் தக்கது.

## தமிழ் இசை இயக்கம் :

அண்ணாமலை அரசரவர்கள், இசைக் கலையில் மிகவும் ஈடுபாடு உடையவர்கள்; முன்னரே இசைக் கலைக்குப் பெரும் பணி ஆற்றியவர்கள். 1929 ஆம் ஆண்டிலேயே சிதம்பரத்தில் இசைக் கல்லூரியினை நிறுவி, அதனை 1932 ஆம் ஆண்டில், அண்ணாமலைப் பல்கலைக் கழகத்துடன் சேர்த்தவர்கள். 1936 ஆம் ஆண்டில் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் துணைவேந்தர் வி. எஸ். சீநிவாச சாஸ்திரியார் அவர்கள் தலைமையில் இசை மாநாடு ஒன்று கூட்டப் பெற்றது.

தமிழ் இசைப் பாடல்களைப் பலர் அறியச் செய்யவும், தமிழ் இசைப் பாடல்கள் மேலும் மேலும் இயற்றப்பெறவும் ஆவன செய்ய வேண்டுமென்று அம்மாநாடு வற்புறுத்தியது. ஆயினும் 1940 ஆம் ஆண்டுவரை தமிழ் நாட்டு இசை அரங்குகளில் பிறமொழிப் பாடல்களையே இசைவாணர்கள் பாடுவாராயினர்.

தமிழ் இசை வீழ்ச்சியுற்றுக் கிடக்கும் இத் துன்ப நிலையினைக் கண்டு அண்ணாமலை அரசர் அவர்கள் உளம் உருகினார்கள்; பொருள் தெரியாத வேற்று மொழிப் பாடல்களால் தமிழர் பொருளுணர்ச்சியுடன் இசை இன்பத்தினை நுகர இயலவில்லையே என ஏங்கினார்கள்; சங்க காலத்திலும் சமய காலத்திலும் தமிழகத்தில் தனியாட்சி புரிந்துவந்த தமிழ் இசைக்கு உரிய இடத்தினைப் பிறமொழிப் பாடல்கள் கவர்ந்து கொண்டனவே எனக் கவலையுற்றார்கள்.

16–11–1940ல் நடைபெற்ற அண்ணாமலைப் பல்கலைக் கழகப் பட்டமளிப்பு விழாவில் செட்டிநாட்டு அரசர் அவர்கள், தமிழ் இசை வளர்ச்சிக்காக ரூபாய் பதினாயிரம் நன்கொடை அளித்தார்கள். தமிழ் இசை வளர்ச்சிக்காக முதன் முதலாக மாநாடு ஒன்று 14–8–1941 முதல் 17–8–1941 முடிய நான்கு நாட்கள் மிகச் சிறப்பாக நடைபெற்றது. 4–9–1941ல் திருச்சிராப்பள்ளியில், பெரியார் ஈ. வெ. இராமசாமி அவர்கள் தலைமையில் மாபெருங் கூட்டம் ஒன்று நடைபெற்றது. 15–9–1941ல் சிறந்த இசைக் கலைஞர் பலர் கூடிச் செட்டிநாட்டரசர் தோற்றுவித்துப் பேணும் தமிழ் இசை இயக்கத்துக்கு ஆதரவளிக்கத் தக்க சமயம் இது என்று ஓர் அறிக்கை வெளியிட்டனர். 16–9–1941ல் சென்னை விக்டோரியா மண்டபத்தில் அறிஞர்களும் கலைஞர்களும் கூடித் தமிழ் இசை இயக்கத்தினை ஊக்கும் வகையில் தீர்மானங்கள் நிறைவேற்றினர்.

திரு T. M. நாராயணசாமிப் பிள்ளை



அண்ணாமலை அரசர் அவர்களின் அறுபதாம் ஆண்டு நிறைவு விழாவினை அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தினர் 30-9-1941ல் மிகச் சிறப்பாகக் கொண்டாடினர். அப்போது அண்ணாமலை அரசர்



தமிழ் இசைச் சங்கம் நிறுவிய தலைவர் ராஜா சர் அண்ணாமலைச் செட்டியார் அவர்கள்

அவர்கள், தமிழ் இசைப் பாடல்கள் இயற்றுவதை ஊக்குதற் பொருட்டும், புதுப் பாடல்களைக் கற்பித்தல் நாட்டில் பரவுதற் பொருட்டும், பதினையாயிரம் ரூபாய் இரண்டாவது நன்கொடையாக அண்ணாமலைப் பல்கலைக் கழகத்துக்கு வழங்கினார்கள். இதுவரை அப் பல்கலைக் கழகம் 1300க்கு மேற்பட்ட தமிழ் இசைப் பாடல்கள், 230 வரை உள்ள இராகங்களில் அமைந்துள்ள முறையில் நூல்கள் வெளியிட்டுள்ளது.

1941 ஆம் ஆண்டில் தேவகோட்டை திருச்சிராப்பள்ளியிலும் 1942-ம் ஆண்டில் மதுரை புதுக்கோட்டையிலும், 1943ம் ஆண்டில் கும்பகோணத்திலும் தமிழ் இசை மாநாடுகள் சிறப்பாக நடைபெற்றன. திருப்பத்தூர், திண்டுக்கல், தஞ்சை, திருநெல்வேலி, வேலூர், காரைக்குடி காத்தான் இன்னும் பல தமிழகப் பேரூர்களில் தமிழ் இசைக் கழகங்கள் தோன்றின.



திரு M. A. முத்தைய செட்டியார்

## சென்னைத் தமிழ் இசைச் சங்கம்

தமிழ் நாட்டின் தவப் புதல்வரும், உலகப் பேரறிஞருமாகிய டாக்டர் சர் ரா. க. சண்முகம் செட்டியார் அவர்கள் தமிழிசை குறித்த தம் கருத்து அரசர் அவர்களின் கருத்தே ஆதலின் தமிழ் இசை வளர்க்கும் முயற்சியில் முழுதும் ஒத்துழைக்க இசைந்தார்கள். இப்பெரியார்கள் இருவரும் தமிழ் இசை வளர்ச்சிக்குத் தாமே பெரும் பொருள் வழங்கினர். நாடெங்கும் சுற்றுப் பயணம் செய்து, தக்க தமிழ்ப் பெருமக்களை அணுகிப் பொருள் சேர்த்தனர். ஏறத்தாழ நான்கு லட்சம் ரூபாய்க்கு மேலாகத் தமிழ் இசைச் சங்கத்துக்கு நிதி அமைத்தனர்.

தமிழ் இசைச் சங்கம் 23-12-1943 முதல் 4-1-1944 வரை பெரியதொரு இசை மாநாட்டினைச் சென்னை, அரண்மனைக்காரத் தெருவில் உள்ள செயின்ட் மேரி மண்டபத்தில் நடத்தியது. தமிழிசைச் சங்கத்தின் தொடக்கமாக அது அமைந்தது.

திரு ரா. க. சண்முகம் செட்டியார்



## தமிழ் இசைக் கல்லூரி :

சென்னைத் தமிழ் இசைச் சங்கத்தின் சார்பாக, 23-1-1944ல் தமிழ் இசைக் கல்லூரி ஒன்று தொடங்கப் பெற்றது.

இக்கல்லூரியினை மேலும் வளர்த்து, வசதிகளைப் பெருக்கி, மிகுதியான மாணவ மாணவிகளுக்குப் பயிற்சி அளித்தல் வேண்டும் எனத் தமிழ் இசைச் சங்கத்தினர் விரும்பித் திட்டங்கள் வகுக்கப் பெற்ற கல்லூரி 22-12-1961ல் தொடங்கி வைக்கப் பெற்றது.

இக்கல்லூரியில் ஆண்களும் பெண்களுமாக 125 மாணவர்கள் கல்வி பயில்கின்றனர். வெளிநாட்டினரும் விரும்பி வந்து இங்குத் தமிழிசை பயில்கின்றனர். கல்லூரிக்கு நூல் நிலையம் உளது. இசைமணி, இசைச் செல்வம் என்னும் பட்டங்களுக்குரிய வாய்ப்பாட்டு வகுப்புக்களும், வாய்ப்பாட்டு, வீணை, பிடில், மிருதங்கம் ஆகிய பிரிவுகளில் தொடக்கப் பயிற்சி, சிறப்புப் பயிற்சி வகுப்புக்களும் நடைபெற்று வருகின்றன. எல்லா மாணவர்களுக்கும் தேவாரப் பாடற் பயிற்சி கட்டாயமாக அளிக்கப் பெறுகின்றது.

## தமிழ் இசைச் சங்க வெளியீடுகள் :

தமிழ் இசைப் பாடல்கள் நாற்பத்தைந்தினைக் கொண்ட கீர்த்தனை மஞ்சரி 1957ல் வெளிவந்தது. 1962ம் ஆண்டில் 'இசை மேதைகள்' என்னும் நூலும், 1966ம் ஆண்டில் இசையரசு எம். எம். தண்டபாணி தேசிகர் அவர்களால் இசை அமைக்கப்பெற்ற 'தேவாரத் திவ்விய பிரபந்தத் திருப்புகழ்ப் பாடல்கள்' என்னும் நூலும் வெளி வந்தன.

## தமிழ் இசைப் பாடல் போட்டிகள்

28-12-1947ல் பொதுவாகத் தமிழ் இசைப் பாடல் போட்டியும், 11-4-1948ல் முத்துத் தாண்டவர் பாடல் போட்டியும் நடைபெற்றன. கோபாலகிருஷ்ண பாரதியார் பாடல் போட்டி 1948ஆம் ஆண்டிலிருந்து தொடர்ந்து நடைபெற்று வருகிறது. தேவாரத் திவ்யப் பிரபந்தப் போட்டி, காஞ்சீபுரம் நாயனாபிள்ளை நினைவுப்போட்டி, பல்லவிப் போட்டி, திருப்பாவை திருவெம்பாவைப் பாடல் போட்டி முதலிய பல போட்டிகளும் தமிழ்

திரு T. S. சுக்ராபிஷேக முதலியார்

இசைச் சங்கத்தினரால் நடத்தப் பெற்று வருகின்றன.

போட்டியில் வெற்றி பெற்றவர்களுக்குத் தமிழ் இசை விழாவில் சிறந்த பரிசுகள் வழங்கப் பெறுகின்றன.

## ராஜா அண்ணுமலை மன்றம்

பத்து ஆண்டுகள் நல்ல வளர்ச்சி பெற்ற நிலையில் தமிழ் இசைச் சங்கம் தனக்கென்று எட்டு லட்ச ரூபாய்ச் செலவில் நகரின் மத்தியில் ஒரு பெருங் கட்டடத்தினைப் பெற்றது. இம்மன்றத்தின் புதுமனை புகும் விழா 31—10—1952 ஆம் ஆண்டில் சிறப்பாக நடைபெற்றது. தமிழ் இசைச் சங்கத்தின் பத்தாம் ஆண்டு விழாவிலிருந்து தொடர்ந்து நடைபெற்றுவரும் தமிழிசை விழாக்கள் இச்சிறந்த கட்டடத்திலேயே நடைபெற்று வருகின்றன.

திரு M. A. சிதம்பரம்

## இசைக் கருவி நிலையம்

தமிழ் இசைச் சங்கத்தின் சார்பாக, இசைக் கருவி நிலையம் ஒன்று 1—1—1956ல் அமைக்கப் பெற்றது. பல ஆண்டுகளாக முயன்று பல இசைக் கருவிகள் இந்நிலையத்தில் சேர்த்து வைக்கப்பெற்றுள்ளன. திருவாரூர் கும்பகோணம் முதலிய நகரங்களில் உள்ள திருக்கோவில்களிலிருந்து வரவழைக்கப்பட்ட சிறந்த இசைக் கருவிகளும், வழக்கற்று மறைந்து போன இசைக் கருவிகள் சிலவும் இங்கே உள்ளன. காலஞ்சென்ற புகழ் வாய்ந்த இசைக் கலைஞர்களின் படங்கள் பல, ராஜா அண்ணுமலை மன்றத்தில் உள்ளன.

## தமிழ் இசை ஆராய்ச்சிக் குழுவும் பண் ஆராய்ச்சியும்

தமிழ்ப் பண் இசை ஆராய்ச்சிப் பணியினைத் தமிழ் இசைச் சங்கம், 1949ஆம் ஆண்டில் தொடங்கியது. டாக்டர் ரா. க. சண்முகம் செட்டியார் அவர்கள் தலைமையில் 25—11—1949ல் கூடிய தமிழ் இசைக் குழுவினர், ''இசைத் தமிழ்ப் பழஞ்செல்வங்களாகிய தேவாரப் பண்கள், தொடக்கத்தில் ஒரே முறையில்தான் பாடப்பெற்றிருக்கும்; பின்பு காலம் செல்லச் செல்ல மக்கள் பலவகைகளில் பாடத் தொடங்கி விட்டனர். அவ்வாறு பல வகையாகப் பாடும் ஓதுவார்களைக் கூட்டிப் பாடிக் காட்டச் செய்து ஆராய்ந்து பழைய முறையைக் கண்டு, அம்முறையை எங்கும் பரப்ப எல்லா முயற்சியும் செய்தல் வேண்டும்'' என்று முடிவு செய்தனர். தொடர்ந்து பதினேழு ஆண்டுகளாகப் பண் ஆராய்ச்சிக் கூட்டம் நடைபெற்று வருகின்றது.

## கட்டடம் புதுப்பித்தல்

சுமார் இரண்டுலட்சம் ரூபாய்ச் செலவில் ராஜா அண்ணுமலை மன்றம், புகழ்பெற்ற கட்டடக் கலை நிபுணர் திரு எஸ். எல். சித்தலே அவர்கள் மேற்பார்வையில் புதுப்பிக்கப்பெற்றுள்ளது. ஒலி, ஒளி அமைப்புக்கள் சிறந்த முறையில் அமைக்கப்பெற்றுள்ளன. உட்காருவதற்கு வாய்ப்பான வசதியுடன் கூடிய உயர்ந்த நாற்காலிகள் வளைவு வரிசையில் அமைக்கப்பட்டுள்ளன. எளிதாக நகர்ந்து செல்வதற்கு ஏற்ற முறையில் இடவசதி அமைந்துள்ளது. எங்கிருந்து உட்கார்ந்து பார்த்தாலும் காட்சிகள் நன்கு தெரியும்படியும், ஒலி நன்கு கேட்கும்படியுமாக அரங்கம் புதிதாக நிர்மாணிக்கப்பட்டுள்ளது. புதுப்பொலிவும் வனப்பும் கொண்டு ராஜா அண்ணுமலை மன்றம் இப்போது திகழ்கின்றது.

இவ்வாறு தனிப்பெருஞ் சிறப்புடன் பல வகைத் தொண்டுகள் ஆற்றி வெள்ளிவிழாக் கொள்ளும் வீறுபெற்ற தமிழ் இசைச் சங்கம் தலைவர்கள், கலைஞர்கள், பொதுமக்கள் ஆகியோரின் ஒத்துழைப்புடன் மேலும் மேலும் வளர்ச்சி பெற்று நீடு வாழ இறைவன் அருள் புரிவானுக !

# யாரோ இவர் யாரோ



'சோ'

### அத்தியாயம் 21

சின்னதுரைக்குச் சபாபதியின் மேல் உள்ள கோபம் இன்னும் அடங்கவில்லை. முத்துவையும் சபாபதியையும் முட்டாள் என்று திட்டித் தீர்த்தார். இதனால் தணிகாசலத்துக்கும் சின்னதுரைக்கும் வாக்குவாதம் முற்றியது.

''முத்துவை என்ன ஒண்ணுலும் சொல்லு. அவன் அப்பனைப் பத்திப் பேசாதே!'' என்றார் தணிகாசலம்.

''சபாபதி முட்டாள்தான்.''

''அப்படிச் சொல்லுங்க. அது தேவலாம். சபாபதி முட்டாள்னு சொன்ன எனக்கு ஒண்ணும் இல்லை'' என்றார் தணிகாசலம்.

ரவி இவர்கள் சண்டையில் தனது காரியங்கள் அடிபட்டுப் போய்விடப் போகின்றனவே என்று பயந்து இருவரையும் பார்த்து, ''போதும் தமாஷ்! இதென்ன விளையாட்டு!'' என்று கூறி அமர்த்தினன்.

தணிகாசலம் சின்னதுரையைப் பார்த்து, ''சரிங்க, சீக்கிரமாவே கல்யாணத்தை முடிச்சுப்புடலாம்'' என்றார்.

சின்னதுரை தணிகாசலத்தையும் ரவியையும் தங்கள் வீட்டிலேயே சில நாட்கள் தங்கும்படி கேட்டுக்கொண்டார். ரவியின் கட்டாயத்தின் பேரில் வேண்டா வெறுப்பாகச் சபாபதியும் முத்துவும் தங்குவதற்கும் ஒப்புக்கொண்டார். எங்கே ரவி கோபித்துக் கொண்டு விடப் போகிறானே என்ற பயத்தில் பல நாட்கள் விரோதத்தைக் கூடச் சில நாட்கள் பொறுத்துக் கொள்ள வேண்டியதுதான் என்று தீர்மானித்துச் சபாபதிக்கும், முத்துவுக்கும் தம் வீட்டிலேயே தங்குவதற்கு ஓர் அறையைக் கொடுத்தார்.

சபாபதிக்குக் கொடுக்கப்பட்ட அறையில் ஒரு காலண்டரில் வேல் முருகன் படம் இருந்தது. ''எல்லாம் நல்லபடியா நடக்க வேண்டுமே, முருகா!'' என்று அவர் அந்தப் படத்தின் முன் நின்று வேண்டிக் கொண்டார். அப்போது காற்றில் காலண்டர் தாள்கள் பறக்கவே, வேல் முருகன் படம் மேலே தள்ளப்பட்டு, அடுத்தபடியாக இருந்த விநாயகர் படம் வந்து நின்றது.

ஃ ஃ ஃ

தணிகாசலம், ரவி, சபாபதி, ஆகியவர்கள் சின்னதுரை வீட்டில் தங்களுக்குத் தரப்பட்ட அறைகளில் சேர்ந்து சிறிது ஓய்வு எடுத்துக் கொண்டிருந்தார்கள். முத்து மட்டும் அறையை விட்டு வெளியே வந்து தோட்டத்தில் உலாவிக் கொண்டிருந்தான். அப்போது தெருவில் தனது காரில் சென்று கொண்டிருந்த ராஜரத்தினத்தின் கண்களில் முத்து தென்படவே காரை நிறுத்திச் சின்னதுரை வீட்டினுள் நுழைந்தார்.

''டாக்டர் மேகநாதன்!'' என்ற குரல் கேட்டுத் திரும்பிப் பார்த்தான் முத்து. ராஜரத்தினம் நின்று கொண்டிருந்தார்.

''டாக்டர், இங்கே எங்கே வந்திருக்கீங்க? இந்த வீட்டிலே ஏதாவது நாய்க்கு உடம்பு சரியில்லையா?'' என்றார் ராஜரத்தினம்.

''இல்லே ஸார். இந்த வீட்டுலே எல்லா நாயும் சௌக்கியம். இங்கே என் சிநேகிதன் ரவி, எங்கப்பா எல்லாரும் வந்திருக்காங்க. அவங்களோட நான் வந்திருக்கிறேன்.''

''உங்கப்பா வந்திருக்கிறாரா?'' — ராஜரத்தினத்தின் முகத்திலே மகிழ்ச்சி படர்ந்தது. ''அவரோட நான் பேசணுமே!''

தான் பெரிய தவறு செய்துவிட்டோம் என்பதை முத்து உணர்ந்தான். 'இப்போது யாரைத் தனது தந்தை என்று இவருக்கு அறிமுகப்படுத்துவது? தனது நிஜத் தந்தை தணிகாசலத்தையா? அல்லது சபாபதியையா? என்ன இக்கட்டான நிலை? ரவியைக் கேட்காமல் ஏதாவது பேசினால் இப்படித்தான் ஆபத்து வரும். இனி ஒரு வார்த்தை ரவியைக் கேட்காமல் பேசக் கூடாது' என்று தீர்மானித்தான்.

''கொஞ்சம் இருங்க ஸார் வரேன்'' என்று கூறி உள்ளே போக யத்தனித்தான் முத்து.

''நானும் உள்ளே வரேன். எனக்குச் சின்னதுரையை நல்லாத் தெரியும். அவரையும் பார்த்து ரொம்ப நாளாகுது!'' என்று கூறி முத்துவைப் பின்தொடர்ந்தார் ராஜரத்தினம்.

தர்மசங்கடமான நிலையில் மாட்டிக்கொண்ட முத்து எல்லாம் வல்ல இறைவனின் மீது பழியைப் போட்டு ராஜரத்தினம் பின்தொடரத் தனது இஷ்ட தெய்வம் ரவியைப் பார்க்க வீட்டினுள் சென்றான். ஒரு தெய்வத்தின் மீது நம்பிக்கை வைத்தால் அது வீண் போவதில்லை. ரவியே அப்போது மாடிப் படிகளில் இறங்கி வந்துகொண்டிருந்தான்.

முத்து ரவியைப் பார்த்துக் கண் ஜாடை செய்



தான். ரவி, 'என்ன சொல்கிறாய்?' என்ற பாவனையில் முத்துவைப் பார்த்தான். 'என்ன வரம் வேண்டும் கேள்' என்று தெய்வம் கேட்பதுபோல் இருந்தது முத்துவுக்கு.

''ரவி! இவர்தான் மிஸ்டர் ராஜரத்தினம். இவங்க வீட்டு நாய்க்குத்தான் நான் வைத்தியம் பார்த்தேன்'' என்று ரவியிடம் கூறிவிட்டு முத்து ராஜரத்தினத்துக்கும் ரவியைத் தனது உயிர்ச் சிநேகிதன் என்று அறிமுகப் படுத்தி வைத்தான்.

''டாக்டர்! உங்கப்பா எங்கே?'' என்றார் ராஜரத்தினம்.

முத்து ரவியைப் பரிதாபமாகப் பார்த்தான். ''ரவி! இவர் எங்கப்பாவோடே பேசணும்னு சொல்றாரு. எங்கப்பாவோடே'' என்றான் முத்து.

அச்சமயம் சின்னதுரையும் அந்த ஹாலுக்கு வந்து சேர்ந்தார்.

''என்ன ஸார், சின்னதுரை! சௌக்கியமா?'' என்றார் ராஜரத்தினம்.

''அடே! ராஜரத்தினமா? எங்கே ரொம்ப நாளைக்கு ரொம்ப நாள்! வழி மறந்துட்டுதா?'' என்று குசலம் விசாரித்தார் சின்னதுரை.

''எங்கே ஸார்? 'டைம்' கிடைக்கிறதில்லே. நம்ம டாக்டரை இங்கே பார்த்தேன். அப்படியே உங்களையும் பார்க்கணும்னு உள்ளே வந்தேன்'' என்று கூறிய ராஜரத்தினம், டாக்டர் என்று கூறும் போது முத்துவைச் சுட்டிக் காட்டியதைச் சின்னதுரை பார்த்தார்.

''ஓ! டாக்டரா இவரு!'' என்று கேட்டபோது அவர் குரலில் கிண்டல் ஒலித்தது. 'சபாபதியின் மகன் டாக்டருக்கு வேறு படித்திருக்கிறானா? இந்தக் குடும்பத்துக்கு இது ஒரு கேடா?' என்று அவர் நினைத்ததே அந்தக் கிண்ட



னுக்குக் காரணம். ஆனால் வழக்கம் போல் சின்னதுரையின் முகம் எந்த வித மாறுதலும் இல்லாமல் இருந்ததால் அது கிண்டலாகக் கேட்கப்பட்ட கேள்வி என்பது யாருக்கும் புரியவில்லை.

ராஜரத்தினம் முத்துவைப் பார்த்து மீண்டும் ''உங்கப்பா எங்கே?'' என்றார்.

காலைச் சுற்றின பாம்பு கடிக்காமல் விடாது என்பதை முத்து உணர்ந்தான். சின்னதுரை அங்கேயே இருந்த படியால், தணிகாசலத்தை முத்துவின் தந்தை என்று அறிமுகப்படுத்த முடியாது என்று தீர்மானித்த ரவி, ''மிஸ்டர், சபாபதி! மிஸ்டர் சபாபதி! ஸார் சபாபதி ஸார்!'' என்று உரக்க அழைத்தான்.

சபாபதி இந்தக் குரல் கேட்டு இறங்கி வந்த போது, அவரைத் தணிகாசலமும் பின்தொடர்ந்தார். ரவியின் குரல் கேட்டாலே அடுத்த படி என்ன புதிய திட்டமோ, அதில் தமக்கு என்ன வேஷமோ என்று பயந்து நடுங்கும் நிலைக்கு அவர் வந்து விட்டதே இதற்குக் காரணம்.

''இவர்தான் ஸார், டாக்டர் அப்பா. மிஸ்டர் சபாபதி!'' என்று அறிமுகப்படுத்தினான் ரவி. தனது தந்தை சபாபதியைப் பார்த்து ஜாடை காட்டிவிட்டு ராஜரத்தினத்தை அவருக்கு அறிமுகப்படுத்தினான். ''மிஸ்டர் சபாபதி! இவர்தான் ராஜரத்தினம். பெரிய நகை வியாபாரி!''

''வணக்கம் ஸார்!'' என்றார் ராஜரத்தினம்.

''வணக்கம் மிஸ்டர் ராஜரத்தினம்!'' என்றார் சபாபதி. அவர் பேச ஆரம்பித்தவுடன் அங்கிருக்கப் பிடிக்காமல் சின்னதுரை, ''பேசிக்கிட்டிருங்க.... நான் இதோ வர்றேன்.....'' என்று கூறி உள்ளே சென்று விட்டார்.

ராஜரத்தினம் சபாபதியைப்பார்த்து, ''உங்ககிட்டே ஒரு விஷயம் சொல்லணும். நீங்க தப்பா நினைக்கக்கூடாது'' என்று ஆரம்பித்தார்.

''பரவாயில்லே, சொல்லுங்க!'' என்றார் சபாபதி.

''உங்க மகன் டாக்டர் மேகநாதன் இருக்காரே...'' என்று ராஜரத்தினம் தொடங்க, சபாபதி இடைமறித்தார்.

''யாரு மேகநாதனு?'' என்றார். முத்துவின் பெயர் மேகநாதன் என்பது அவருக்குத் தெரியாது. முத்துவின் பெயர் முத்து என்றுதான் அவர் நினைத்திருந்தார். ரவி நிலைமையைச் சமாளிக்கப் பேச்சில் கலந்து கொண்டான். ''ஆமாம், மிஸ்டர் சபாபதி! உங்க மகன் மேகநாதனைப் பத்தித்தான் சொல்றார்!'' என்று விளக்கினான்.

''ஓஹோ! சரி, சரி! அப்படியா! சரி, சரி! ஆஹா! சரி, சரி! இருக்கட்டும். சரி! சரி'' என்றார் சபாபதி. தாம் பெற்ற செல்வம் ரவி செய்துள்ள குழப்பங்கள் முழுவதையும் தாம் இன்னமும் புரிந்து கொள்ளவில்லை என்பதை அவர் இப்போது புரிந்து கொண்டார்.

ராஜரத்தினம் மீண்டும் தயங்கித் தயங்கி ஆரம்பித்தார். ''ஸார்! உங்க மகன் இருக்காரே, ரொம்ப நல்லவர். எனக்கே அவரை ரொம்பப் பிடிச்சிருக்குது. அப்படி இருக்கிறபோது இந்த மாதிரி நடந்ததுலே அதிசயமே இல்லே!''

''எந்த மாதிரி?'' என்ற சபாபதி 'கேட்டது சரிதானே' என்கிற பாவனையில் ரவியைப் பார்த்தார்.

''சரி, சரி!'' என்றான் ரவி.

''என்ன சரி?'' என்றார் ராஜரத்தினம்.

''என்ன மாதிரி நடந்திருந்தாலும் அது சரிதான்'' என்றான் ரவி. அவன் வாழ்க்கைத் தத்துவமே அதுதான். 'நடந்தவை எவையும் நம் நலனுக்குத் தான்' என்று கருதியே அவன் ஒவ்வொரு நிகழ்ச்சியையும் பார்த்தான்.

''அது சரி, சார்! நான் எதுக்குச் சொல்ல வந்தேன்னா, எனக்கே நம்ம டாக்டர் மேலே ஓர் அன்பு வந்திரிச்சு. அப்படியிருக்கிற போது என் பொண்ணுக்கு வந்ததுலே ஒண்ணும் ஆச்சரியமில்லே.''

''உங்க பொண்ணுக்கு என்ன வந்தது?'' என்றார் சபாபதி.

''காதல்!'' என்றார் ராஜரத்தினம்.

''யார் மேலே?''

''டாக்டர் மேலே!''

''எந்த டாக்டர்?''

''உங்க பையன் டாக்டர்.!''

''ஓஹோ! சரி, சரி! ஆஹா! சரி! சரி! அப்படியா சரி! சரி! இருக்கட்டும். சரி! சரி!'' என்றார் சபாபதி. புரியாத விஷயங்களைப் புரிந்து கொள்ளத் தத்தளிக்கும்போது அவரை அறியாமல் பல 'சரி'க்கள் வந்து உதிர்ந்தன.

''உங்க மகனுக்கு என் பொண்ணு கிரிஜாவைக் கொடுக்கிறதுலே எனக்குப் பரம திருப்தி. உங்க சம்மதம்தான் தேவை. நீங்க என்ன சொல்றீங்க?'' என்ற ராஜரத்தினம், ''நீங்க சரின்னு ஒரு தடவை சொல்லிட்டாப் போதும். கல்யாணத்தை நிச்சயம் செய்துவிடலாம்'' என்று முடித்தார்.

தணிகாசலம் பொறுமை இழந்தார். எங்கே தனது மகன் கல்யாணம்

# இனிமைக் காவியம்

இதயம் திறந்த பேச்சினிலே
புத்தம் புதிய இரகசியங்கள்—
துர்க்கந்தம் அகற்றும் க்ளோரோபைல்
கொண்ட பினாகா க்ரீன் துணையிருப்பின்:
பேசும் பேச்செல்லாம்
இனிமைக் காவியமே!




CIBA

தடைப்பட்டுவிடப் போகிறதோ என்று பயந்து, "சரின்னு ஒரு தடவை சொல்றது என்னய்யா? அவர்தான் அப்பவே புடிச்சுச் சரி, சரி, சரி சரின்னுக்கிட்டே இருக்கிறாரே! கல்யாணத்தை நிச்சயம் பண்ணுங்க!" என்றார்.

"இவரு யாரு?" என்று ராஜரத்தினம் கேட்கத் தணிகாசலம் கோபத்தோடு, "உன் சம்பந்தி! அதெல்லாம் உனக்கெதுக்கு? நான் ரவி அப்பா!" என்றார்.

சபாபதி ராஜரத்தினத்தைப் பார்த்து, "எனக்கும் சம்மதம். கல்யாணத்தை நிச்சயம் செய்யுங்க" என்றார்.

"அப்போ நான் வரட்டுமா?" என்று ராஜரத்தினம் புறப்பட, சபாபதி அவரை நிறுத்தி, "ஆமாம்! உங்க மகளுக்கும், என் மகனுக்கும் காதல்னு எப்படித் தெரிஞ்சுகிட்டீங்க?" என்றார்.

"அவங்க பேசறதை அடிக்கடி பார்த்துக் கிட்டுத்தானே இருக்கிறேன்" என்றார் ராஜரத்தினம்.

"ஓ! அவங்க பேச்சிலேயிருந்து புரிஞ்சுக்கிட்டீங்களா?"

"இல்லே! அவங்க ரெண்டு பேரும் பேசறது எனக்கு ஒண்ணுமே புரியலே. அதனாலேதான் அது காதல்னு தெரிஞ்சுக் கிட்டேன்" என்று கூறிப் புறப்பட்டார் ராஜரத்தினம்.

சபாபதிக்கு ஒன்றும் புரியவில்லை. "ஓஹோ! சரி! சரி! ஆஹா சரி! சரி" என்றார்.

முத்து தானும் ராஜரத்தினத்தோடு போய் வருவதாகச் சொல்லி அவரோடு சென்று விட்டான்.

அவர்கள் இருவரும் வெளியேறிய பிறகு சபாபதியைக் கொன்றுவிடுகிறாற் போல் தணிகாசலம் விழித்துப் பார்த்தார்.

"ஏன்யா! உனக்கு ஏதாவது அறிவு இருக்குதா? என் பையனுக்குப் பொண்ணு கொடுக்கப் பெரிய மனுஷன் வந்திருக்கிறாரு. உன்னைத்தான் பையன் தோப்பனார்னு நினைச்சுக்கிட்டுப் பேசறாரு. கொஞ்சம் கௌரவமாகப் பேசக் கூடாது. பைத்தியம் பிடிச்சவன்மாதிரி 'ஓஹோ! சரி சரி! ஆஹா சரி சரின்னு பாட்டுப் பாடறியே!' என்று எரிந்து விழுந்தார். அதற்குள் சின்னதுரை அங்கு வந்து சேரப் பேச்சு அடங்கியது.

டாக்டர் மேகநாதன், பல நாட்களாகப் பல்லாவரம் அருகில் ஒரு பாழடைந்த பங்களாவில் கட்டுண்டு கிடந்தார். இன்று அவருக்கு ஒரு விமோசனம் ஏற்பட்டது. அந்தப் பங்களாவில் எதிராஜின் ஆட்கள் கள்ளச் சாராயம் காய்ச்சிக் கொண்டிருந்தார்கள். சட்ட விரோதமான காரியம். கல்கத்தாவில் சாராயம் காய்ச்சினால் அது வியாபாரம். சென்னையில் காய்ச்சினால் அது குற்றம். ஒரு பிரதேசத்து வியாபாரம், மற்றொரு பிரதேசத்துக்குக் குற்றம். இதுதான் இந்திய ஒருமைப்பாடு. கல்கத்தாவிலோ, மற்றெந்த மதுவிலக்கில்லாத ராஜ்யத்திலோ சாராயம் காய்ச்சியே பணம் சம்பாதித்துப் பணக்காரனாகி விட்ட ஒருவன் தமிழ் நாட்டில் வந்து குடியேறி மாளிகை கட்டிக் கொண்டு பெரிய மனிதனாக வாழ்ந்தால் தமிழ் நாட்டு அரசாங்கம் அவனை என்ன செய்ய முடியும்? என்ன செய்வது? மகாத்மா காந்தியடிகளுக்குச் சிலைகள் எழுப்பிய போது சில ராஜ்யங்களில் அவருடைய கொள்கைகளுக்குமல்லவா சிலை எழுப்பி விட்டார்கள்!

எதிராஜின் ஆட்கள் அந்தப் பங்களாவிலே சாராயம் காய்ச்சுவது போலீஸாருக்குத் தெரிந்துவிட்டது என்ற விஷயம் எதிராஜின் ஆட்களுக்கு அன்று தெரிந்தது. எந்த நேரமும் போலீஸ் படை வந்துவிடலாம் என்று தெரிந்தவுடன் அவர்கள் அவசரம் அவசரமாக அந்த இடத்தைக் காலி செய்ய ஆரம்பித்

## 'வராது ஸார்!'



நமது நாட்டில் அருகில் உள்ள இடங்களுக்குக் கூப்பிட்டால் டாக்சிக்காரர்கள் வருவதில்லை. ஆனால் ஸோவியத் ரஷ்யாவில் தொலைவிடங்களுக்குக் கூப்பிட்டால் வருவதில்லை. டாக்ஸியை நிறுத்தினால் டிரைவர் முகத்தை மட்டும் நீட்டி, 'எங்கே போகவேண்டும்?' என்று கேட்கிறார்.

அருகிலுள்ள இடமாக இருந்தால், ஏறுவதற்குக் கதவைத் திறக்கிறார். தொலைவிடமாக இருந்தால் கழுத்தை உள்ளே இழுத்துக் கொண்டு டாக்ஸியுடன் பறந்து விடுகிறார். காரணம் ஒரு குறிப்பிட்ட அளவுக்கு மேல் வருமானம் வந்தாலும் அது அவரைச் சேருவதில்லை. அதனால் அவர்கள் அதிகமாக உடம்பை அலட்டிக் கொள்வதில்லை.

ஆதாரம்: "பேஜண்ட்"
தகவல்: மு. இரவீந்திரன்

தார்கள். டாக்டர் மேகநாதனையும் கட்டுக்களை அவிழ்த்துத் தங்களோடு இழுத்துச் செல்ல அவர்கள் முற்பட்ட போது போலீஸ் ஜீப் வரும் சத்தம் கேட்டு அவரை அப்படியே விட்டு விட்டு அவர்கள் அனைவரும் ஓடிவிட்ட னர். போலீஸ்காரர்கள் உள்ளே வந்து பார்த்த போது சாராயம் காய்ச்சும் உபகரணங்களோடு டாக்டர் மேக நாதன் மட்டுமே இருந்தார். அவரிட மிருந்து விவரங்களை அறிந்துகொண்ட போலீஸார் அவரை விடுவித்தனர்.

டாக்டர் மேகநாதன் கட்டுண்டு கிடந்த போது எதிராஜின் ஆட்கள் பேசிக் கொண்டதிலிருந்து அவர், எதிராஜ் டாக்டர் மேகநாதன் என்ற பெயரில் ராஜரத்தினத்தின் வீட்டில் தங்கி வைரம் பதித்த நெக்லேஸைத் திருட முயற்சி செய்யப் போவது பற்றிய விவரங்களை, அறிந்திருந்தார். அவ்விவரங்களை இப்போது அவர் போலீஸ் இன்ஸ்பெக்டரிடம் கூற, போலீஸ் இன்ஸ்பெக்டர் அவரோடு சென்னைக்குப் புறப்பட்டார். அடையாறு போலீஸ் ஸ்டேஷனுக்குச் சென்று அங்கு விவரங்களைக் கூறிச் சரியான போலீஸ் படையோடு ராஜரத்தினம் வீட்டுக்குச் சென்று எதிராஜைக் கைது செய்வது என்பதே இன்ஸ்பெக்டரின் தீர்மானம்.

அந்தப் பங்களாவிலிருந்து தப்பி ஓடிய எதிராஜின் ஆட்கள், உடனடி யாக ராஜரத்தினம் வீட்டுக்குப் போன் செய்து எதிராஜுக்குத் தகவல் தெரிவித்து விட்டார்கள். மேகநாதன் போலீஸ்காரர்களைச் சந்திக்கப் போகி ருர். எந்த நிமிடமும் தன்னைத் தேடிப் போலீஸார் இங்கு வந்து விடலாம் என் பதை எதிராஜ் உணர்ந்தான். அப்போது இரவு சுமார் எட்டு மணி இருக்கும். எதி ராஜும் சிங்காரமும் சேர்ந்து எப்படியா வது அன்றிரவே நகைகளைக் கண்டு பிடித்து எடுத்துக் கொண்டு போய்விட வேண்டும் என்று தீர்மானித்தார்கள். ராஜரத்தினமும், கிரிஜாவும் ஒரு புதிய சினிமாப் படத்துக்கு அன்றிரவு போவ தாகத் திட்டமிட்டு டிக்கெட்டுகள் ரிசர்வ் செய்திருந்த விஷயமும் சிங் காரம் வாயிலாக எதிராஜ் அறிந் தான். இதைவிட நல்ல சந்தர்ப்பம் கிடைக்காது என்றும், இதுவே நகை யைத் திருடக் கடைசிச் சந்தர்ப்பம் என்றும் அவன் புரிந்து கொண்டான். அவனுக்கு ஒரு வேகம் பிறந்தது. எந்த ஒரு காரியத்தையும் முடிக்க ஒரு குறிப்பிட்ட சந்தர்ப்பமே கடைசிச் சந்தர்ப்பம் என்பதை நாம் உணர்ந் தால் அந்தக் காரியத்தில் ஒரு வேகம் பிறக்கிறது. உதாரணத்துக்கு ஒரு நாவ லாசிரியரை எடுத்துக் கொள்ளலாமே! வாரா வாரம் தொடர்ச்சியாக எழுதி ஆறு மாதங்களில் கதையை முடிக்க வேண்டும் என்று கூறுகிருர் பத்திரிகை ஆசிரியர். நாவலாசிரியரும் சரி என்று தலையசைத்து எழுதத் தொடங்கு கிருர். முதல் ஐந்து மாதங்கள் அவ ருடைய கதை பல்வேறு கோணங்களில் போகிறது. ஊர் வம்பையெல்லாம் விலைக்கு வாங்கித் தம் கதையில் திணிக்கிருர். திருப்பதி வேங்கடாசல பதியிலிருந்து திருவாளர் அரசியல்வாதி வரை, சனீசுவர பகவான் உட்படப் பலர் அவர் கதையில் புகுந்து புறப் படுகிருர்கள். ஆருவது மாதம் நெருங்கு கிறது. அவர் கதையில் சொல்லாமல் விட்டுப் போன பல விஷயங்களைச் சொல்ல ஆரம்பிக்கிருர். அப்போது தான் அவருக்கு ஒரு வேகம் பிறக்கிறது.

அதேபோல எதிராஜுக்கு ஒரு புது வேகம் பிறந்தது. அந்தச் சமயத் தில் ராஜரத்தினமும், முத்துவும் வீட் டுக்குள் வந்தார்கள். டாக்டர் மேக நாதன்வாயிலாகத் தன் வேஷம் அம்பல மாகக் கூடும் என்பதை அறியாத முத்து கவலையற்று வந்து கொண்டிருந்தான். ராஜரத்தினமும் கிரிஜாவும் எப்போது சினிமாவுக்குப் புறப்படுவார்கள், தனது நகை வேட்டையை எப்போது தொடங்கலாம் என்று காத்துக் கொண் டிருந்தான் எதிராஜ். **(தொடரும்)**





சித்ரால் — விஜய சித்ரா பரிசு வழங்கு விழாவில் கோத்ரெஜ் சோப் கம்பெனியின் விற்பனை மானேஜர் ஸ்ரீ ஹெச். ஆர். ஏ. பக்த் வரவேற்புரை நிகழ்த்தினார்.



உதவிப் பிரதம மந்திரி ஸ்ரீ மொரார்ஜி தேசாய் உலக சைவ உணவு காங்கிரஸைத் தொடங்கி வைத்தார். தலாய் லாமாவை உதவிப் பிரதம மந்திரி வரவேற்கிறார். சைவ உணவு காங்கிரஸின் தலைவி ஸ்ரீமதி ருக்மிணி தேவியும் அருகில் நிற்கிறார்.



இந்திய ப்ருக் பாண்ட் கம்பெனியின் தலைவர் ஸ்ரீ ஜேம்ஸ் கார்டன் ராபின்ஸன் சென்னையில் நடந்த நிருபர் கூட்டத்தில் பேசுகிறார். இடமிருந்து வலம்: ஸ்ரீ பி. ஆர். நீலகண்டன், டி. வி. கோத்தாரி, ஜே. ஜி. ராபின்ஸன், டி. கே. பலா.

அடையாறு கல்கி நுண்கலைச் சங்கத்தினர் பேராசிரியர் கல்கி அவர்களின் நினைவு நாளை டிசம்பர் 3ந் தேதி தமிழகப் பொதுத் துறை அமைச்சர் திரு மு. கருணாநிதி அவர்களின் தலைமையில் சிறப்பாகக் கொண்டாடினர்.





சமயச சார்பற்ற நமது சுதந்திர இந்திய சமூகத்தில் கிறிஸ்துவ சமயம் ஒன்றி இணைந்துவிட்டிருப்பதை 'இன்று நாம் காண்கிறோம். மக்களில் ஒரு கணிசமான பகுதியினர் கிறிஸ்து மதத்தினர். நாட்டின் பல பகுதிகளில் கிறிஸ்துவ தேவாலயங்கள் மலிந்து உள்ளன. இவற்றுள் தென்னகத்தில், குறிப்பாகச் சென்னை ராஜ்யத்தில் மிக அதிகமான புனித தேவாலயங்கள் உள்ளன. இவற்றில் சில ஆலயங்களில் கணக்கற்ற புனித கிறிஸ்துவச் சின்னங்கள் இருக்கின்றன. சென்னை ராஜ்யத்திலுள்ள மூன்று தேவாலயங்கள் இவற்றுள் மிகவும் கீர்த்தி வாய்ந்தவை. கணக்கற்ற கிறிஸ்துவர்கள் உலகின் பிற நாடுகளிலிருந்துங்கூட இந்தப் புனித ஸ்தலங்களுக்கு யாத்திரை வருகின்றனர்.

ஒன்று சென்னை மாநகரிலேயே உள்ளது. ஸாந்தோம் பகுதியிலுள்ள ''சிறிய புனித கூடம்'' (Minor Basilica) கிறிஸ்தவ சமுதாயத்துக்கு மிகவும் புனிதமானது. பல தூண்களை வரிசையாக அமைத்து, கூம்பிய கமான்கள் வளைத்து ''காதிக்'' கட்டிடக் கலைச் சம்பிரதாயத்தில் இவ்வாலயம் கட்டப்பட்டிருக்கிறது. இப்போது காட்சி அளிக்கும் ஸாந்தோம் தேவாலயம் இருக்குமிடத்தில் 1892ம் ஆண்டு வரையில் ஒரு சிறிய ஆலயம் மட்டுமே இருந்தது. பின்னர் உருவாகிய மாபெரும் தேவாலயம் 1896ம் ஆண்டு மே மாதம் 10ந் தேதியன்று புனிதம் பெற்றது. ஆலயத்தில் எழுந்தருளியுள்ள மயிலாப்பூர் திருவம்மையாரின் சிலை வடிவழகு மிகுந்தது. மிகவும் தொன்மை வாய்ந்தது. சுமார் நானூறு ஆண்டுகளுக்கு முற்பட்டது இச்சிலா ரூபம். (எதிர்ப்புறமுள்ள படம்) பொன்னே போல் போற்றப்படுகிறது. புனித ஃபிரான்ஸிஸ் ஸேவியர் மயிலாப்பூருக்கு விஜயம் செய்தபோது அவருக்கு எவ்வித தீமையும் ஏற்படாதவாறு இவ்வம்மையாரின் அருள் பாதுகாத்ததாக நம்பப்படுகிறது.

இந்தத் தேவாலயத்தைப் பற்றி ருசிகரமான சில கதைகள் உண்டு. புனித ஸேவியர் இங்கு வந்த காலத்தில் மயிலாப்பூரை ஆண்டு வந்தவர் ஒரு ஹிந்து. சுத்தப்ப ராஜாவாக இருக்கலாம். அந்தக் காலத்தில் ராஜ்யத்தில் சில பகுதிகளைக் கடல் அலைகள் தமக்கு இரையாக்கிக் கொண்டன. இவ்வாறு கடலுக்கு இரையாகும் என்பதை இப் புனித தூதர் முன்னமேயே உணர்ந்து சொல்லியிருந்தாராம். கடல் அலைகள் தமது குடில் வாசலை மோதும்போது மேலை நாட்டினர் இங்கு வந்து கிறிஸ்துவக் கோட்பாடுகளைப் பிரசாரம் செய்வார்கள் என்று கூறினாராம். அதேபோல் பல நூற்றாண்டுகளுக்குப் பின் போர்த்துகீசியர்கள் இந்தப் பகுதிக்கு வந்தபோது, அவர் வசித்து வந்த குடிலுக்கு வெகு சமீபத்திலேயே கடல் அலைகள் மோதிக்கொண்டிருந்தனவாம்.

இந்தத் தேவாலயத்தில் சில புனிதமான கிறிஸ்துவச் சின்னங்கள் இருக்கின்றன. 1523ம் ஆண்டில் போர்த்துகீஸியர் இங்கே தேவாலயத்தை நிர்மாணம் செய்தபோது, புனித தாமஸ் அடக்கம் செய்யப்பட்டிருந்த கல்லறையைத் திறக்க வேண்டியிருந்ததாம். அதில் காணப்பட்ட இப் புனித சாதுவின் சில எலும்புத் துண்டுகளும், இவரைத் தாக்கி மரணமடையச் செய்த மர ஈட்டியின் முனையும், வணங்குதற்குரிய சின்னங்களாக ஸாந்தோம் தேவாலயத்தில் இன்றும் வைக்கப்பட்டுள்ளன. 1953ம் ஆண்டில் போப்பாண்டவரின் பிரதிநிதி ஆசார்ய திஸ்ஸேரண்ட் (Cardinal Tisserant) இங்கே விஜயம் செய்தபோது, இயேசுநாதர் உத்தானமடைந்தபின் அவருடைய புனித சரீரத்தைத் தொட்டுத் தடவின ஸாது தாமஸின் கரத்தின் ஒரு பகுதி தருவிக்கப்பட்டு, மற்றப் புனித சின்னங்களுடன் இங்கே வைக்கப் பட்டிருக்கிறது. மார்க்கோ போலோ தமது பிரசித்தி பெற்ற யாத்திரைக் குறிப்பில் ஸாந்தோம் பற்றியும் சொல்லியிருக்கிறார்.

இரண்டாவதான முக்கிய தேவாலயம் தஞ்சைக்கு அடுத்த வேளாங்கண்ணியில் உள்ளது. இங்கே எழுந்தருளியிருக்கும் திருவம்மையாரை ''நமது ஆரோக்கிய மாதா'' என்று கொண்டாடுகின்றனர். 1858ம் ஆண்டில் பிரான்ஸ் நாட்டில் லூர்தெஸ் (Lourds) என்னும் ஊரிலுள்ள ஓர் வேளாளப் பெண்மணிக்கு மேரி அன்னை காட்சியளித்து அருளினார். அதேபோல் புனிதத் தன்மை வாய்ந்தது வேளாங்கண்ணியிலுள்ள இந்திய ''லூர்தெஸ்'' என்னும் அம்மையின் கோயில். ஆசியாவிலேயே வேளாங்கண்ணி ஓரிடத்தில்தான் மக்களுக்கு மேரி மாதா நேராகக் காட்சியளித்ததாக வரலாறுகள் உள்ளன.

ஒரு சமயம் ஒரு முடவச் சிறுவனிடமிருந்து மேரி மாதா மோர் வாங்கினார். இதுவே அவனுக்கு விடிவு காலமாக ஆயிற்று. அவனுடைய முடக்கு வாதம் முற்றிலும் குணமடைந்து, நடந்து செல்லும்படி செய்த மாதா, நாகப்பட்டினத்தில் ஒரு விலாசத்தைச்

# மூன்று புனித

சொல்லி இச் சம்பவத்தை அங்கே தெரிவிக்கும்படி அவனிடம் சொல்லி யனுப்பினர். முந்திய இரவே நாகப்பட்டினம் வாசிக்கு மேரி மாதா கனவில் தோன்றியிருந்தார்.

மற்றொரு சமயம் மாதா தமது குழந்தை ஏசுநாதருக்குப் பால் கொடுத்து உதவும்படி, பால்காரன் ஒருவனைக் கேட்டாராம். அவன் தன்னிடமிருந்த பால் முழுவதையும் அப்படியே கொடுத்து விட்டானாம். தனது எஜமானனுக்கு இதைப் பற்றிச் சொல்லித் தனது பால் குவளையின் மூடியைத் திறந்தபோது மீண்டும் குவளையில் பால் முழுமையாக நிரம்பி யிருந்தது!

இங்கே வீற்றிருக்கும் அன்னை பல அற்புதங்களைப் புரிந்துள்ளார். பலருக்கு அபயம் அளித்துள்ளார். இவற்றின் சான்றுகளை இத் தேவாலயத்தின் அருகில் உள்ள கண்காட்சியில் இன்றும் காணலாம். அங்கே பல மூங்கில் கூடைப் பெட்டிகளைக் காணலாம். இவை பற்றிய கதை சுவையானது. தூரகிழக்குத் தீவுகளில் வசித்து வந்த சில இந்தியக் கத்தோலிக்கர்கள் வேளாங்கண்ணி தேவாலயத்துக்குத் தருமம் செய்ய வேண்டும் என்று எண்ணினார்கள். மூங்கில் பெட்டிகளில் கொஞ்சம் பணத்தைப் போட்டுப் பத்திரப்படுத்தி, ''வேளாங்கண்ணி ஆலய நிர்வாகிக்கு'' என்று விலாசம் ஒட்டிப் பெட்டிகளைக் கடலில் மிதக்கவிட்டனர். இப் பெட்டிகளெல்லாம் அப்படியே பத்திரமாக உள்ளே வைத்த பணத்துடனே வேளாங்கண்ணியை வந்தடைந்தன.

ஒவ்வோர் ஆண்டிலும் ஆகஸ்ட் 27 லிருந்து செப்டம்பர் 9 வரையிலும் வேளாங்கண்ணி திரு அம்மை (Madonna)யாரின் ஜயந்தி விசேஷமாகக் கொண்டாடப்படுகிறது. ஜன்ம தினம் செப்டம்பர் 8ந் தேதி எனினும் விழா பத்துப் பன்னிரண்டு நாட்கள் நடைபெறுகின்றன.

பதினேழாவது நூற்றாண்டில் 'கோரமாண்டல்' எனப்படும் 'சோழ மண்டல' கிழக்குக் கரையோரம் கப்பலில் சென்று கொண்டிருந்த சில போர்த்துகீசிய மாலுமிகள் கடும் புயலில் சிக்கிக் கொள்ள நேர்ந்தது. கரையிலிருந்து ஆழ் கடலுக்கு அடித்துச் செல்லப்பட்டார்கள். வேறு வகை தெரியாது, தங்களைக் காத்தருளும்படி மேரி மாதாவுக்கு உருக்கத்தோடு பிரார்த்தனை செய்தார்கள். அவர்களது பிரார்த்தனைக்குச் செவிமடுத்துப் புனித அன்னையின் ஜென்ம தினமான செப்டம்பர் 8ந் தேதியன்று அவர்கள் வேளாங்கண்ணி கரையோரம் கொண்டு சேர்க்கப்பட்டனர்.

தூத்துக்குடியில் பத்தாண்டுகளுக்கு ஒரு முறை அங்குள்ள தேவாலயத்தில் எழுந்தருளியுள்ள 'நமது பனிமாதா' (Our Lady of Snows) வின் சிலை ஊர்வலமாக எடுத்துச் செல்லப்படுகிறது. இந்தச் சிலை முதன் முதலில் பிலிப்பைன் நாட்டிலுள்ள மணிலாவில் இருந்தது. ஸாது ஃப்ரான்ஸிஸ் ஸேவியரின் வேண்டுகோளுக்கிணங்கி, இச்சிலை தூத்துக்குடியில் பிரதிஷ்டை செய்யப்பட்டது. 1552ம் ஆண்டில் ஸான்ஸியன் தீவில் மரணமடைந்த இந்த ஸாது அந்த ஸ்தலத்துத் தேவாலயத்தின் உயர் தலைவிக்கு இச் சிலையை பிரதிஷ்டை செய்யுமாறு தமது விருப்பத்தைத் தெரிவித்திருந்தார்.

போப்பாண்டவர் லிபீரியஸ் (Liberius) காலத்திலிருந்தே ''பனிமாதா'' வழிபாட்டுச் சம்பிரதாயம் கிறிஸ்துவ மரபுகளில் ஒன்றாகப் பரவி விட்டது. கடும் கோடையில் பனி பெய்விப்பதன் மூலம் தாம் சுட்டிக் காட்டும் புனித ஸ்தலத்தில் தமக்காக ஒரு தேவாலயம் அமைக்க வேண்டும் என்று மேரி அன்னை ஒரு பெரும் தனிகனுக்குக் கனவில் தோன்றி உத்தரவிட்டார். இதன்படி அந்தக் கோடையில் எஸ்க்விலேன் சிகரம் பனியால் மூடப்பட்டிருந்ததை எல்லோரும் கண்டனர். அங்கே ஆலயமும் எழுப்பினர். அதிலிருந்து போர்த்துக்கீசியரும் ஸ்பெயின் நாட்டவரும் பதினாறுவது நூற்றாண்டில் தாங்கள் சென்ற இடங்களிலெல்லாம் ''பனி மாதா'' வழிபாட்டைப் பிரசாரம் செய்து வந்தனர். தூத்துக்குடியிலும் பரதகுல மக்களிடையே இந்த வழிபாடு மிகப் பக்தியுடன் இன்றும் கொண்டாடப்படுகிறது.

— கே. ராஜா ராமநாதன்



# தேவாலயங்கள்



அவனுக்கு சுயமாக எழுதப் படிக்கத் தெரியாவிட்டாலும்

# தன் மகனை எலெக்ட்ரானிக் என்ஜினீயராக ஆக்க நிச்சயித்தான்!



எப்படி முடிந்தது? அவன் தீர்க்கதரிசி. திட்டமிட்டு பணம் சேர்த்து வந்தான். பல வருடங்களுக்கு முன்பிருந்தே பாங்க் ஆஃப் பரோடா சேமிப்புக் கணக்கில் பணம் சேர்க்க ஆரம்பித்தான். மகன் பெரியவனாக ஆவதற்குச் சரியாக அவன் படிப்பிற்குத் தேவையான பணமும் சேர்ந்தது. இன்று அவன் மகன் கிராமத்திலேயே முதல் எலெக்ட்ரானிக் என்ஜினீயர்! இதைப்பற்றி அவனுக்கு அளவற்ற பெருமை— அவன் மட்டுமென்ன, அந்த கிராமமே பெருமிதப்படுகிறது!

உங்கள் லட்சியக் கனவுகளை நனவாக்குவதற்குத் தேவையான பணம் சேமிக்க பாங்க் ஆஃப் பரோடா உங்களுக்கும் உதவும்! பாங்க் ஆஃப் பரோடாவில் ரூ. 1/- மட்டுமே செலுத்தி சேமிப்புக் கணக்கை ஆரம்பிக்கலாம்...4% வட்டி சம்பாதிக்கலாம்! இன்றே பாங்க் ஆஃப் பரோடாவில் சேமிப்பு கணக்கை ஆரம்பியுங்கள்! உங்கள் பணம் பெருகும் விதத்தைக் கண்டு பிரமித்துப் போவீர்கள்!



**தி பாங்க் ஆஃப் பரோடா லிமிடெட்**

Shilpi/bob/3-67 Tam



# கல்லுக்குள் ஈரம்

ர.சு.நல்லபெருமாள்

அத்தியாயம் 49

## ஆயுள் தண்டனை

திருநெல்வேலிச் சிறைச்சாலைக்குள் ரங்கமணியைச் சந்தித்துப் பேசிக் கொண்டிருந்தார் தீக்ஷிதர்.

மூன்று நாட்களுக்குள் ரங்கமணியின் உடல் உருக்குலைந்து விட்டது. முகம் களையிழந்து விட்டது. கண்கள் சூன்யத்தில் நிலைத்திருந்தன. எதிலுமே நாட்டமில்லாமல் விரக்தியோடு காணப்பட்டான்.

''போதும் தீக்ஷிதர்வாள்! பயங்கர இயக்கமும், தீவிர வாதமும் போதும். லட்சியம் என்றும் கடமை என்றும் கூறிக் கொண்டு, என் கண்களையே இழந்து விட்டேனே'' என்று புலம்பினான். அவனைக் கண்டு தீக்ஷிதரும் கண் கலங்கினார்.

''என்னுடைய பழி வாங்கும் வெறியும், பயங்கரச் சதியும், தீவிரவாதமும் திரிவேணியைப் பழி வாங்கத்தான்

வெள்ளி விழா இரண்டாவது பரிசு நாவல்

பயன்பட்டன. என்னுடைய துப்பாக்கியே அவனுக்கு எமனாகி விட்டதே!'' — ரங்கமணி மனம் குமுறி அழுதான். தீக்ஷிதர் அவனைத் தேற்ற முயன்றார். பாவம், அவரைத் தேற்றவே ஓர் ஆள் வேண்டியிருந்தது.

''திரிவேணியின் அத்தை இறக்கும்போது என்னிடம் ஒரு வாக்குறுதி வாங்கினாள். அதை நிறைவேற்ற முடியாமல்போய் விட்டது'' என்றார் தீக்ஷிதர் மிகுந்த மன வேதனையுடன். கண்ணீரைத் துடைத்துக் கொண்டார்.

''என்ன வாக்குறுதி?'' — ரங்கமணி கேட்டான்.

''உனக்கும் திரிவேணிக்கும் கல்யாணம் செய்து வைத்துவிட வேண்டும் என்றாள்'' என்றார் தீக்ஷிதர். ரங்கமணியின் உதட்டில் வேதனை கலந்த புன்னகை தோன்றியது.

''எனக்கும் அவளுக்கும் பொருத்தமே இல்லை. அவள் தெய்வம். நான் அற்பமானவன், தீக்ஷிதர்வாள், அற்பமானவன். நூற்றுக் கணக்கான உயிர்களைக் காப்பாற்றிய தெய்வம் அவள். உயிரை வாங்கத் துடித்தேனே தவிர அவளைப்போல் உயிரைக் கொடுக்கத் தெரியாமல் இருந்து விட்டேனே. தெய்வமும் சைத்தானும் இணைய முடியுமா?'' என்றான் ரங்கமணி.

இரத்த வெறி கொண்டிருந்த ரங்கமணியின் மனமாற்றத்தைக் கண்டு தீக்ஷிதர் திகைத்தார்.

''உன்னை அஹிம்ஸாவாதியாக்கும் பொறுப்பைத் திரிவேணியிடம் மகாத்மா ஒப்படைத்திருந்தார். அவர் இட்ட பணியைக் கடைசியில் திரிவேணி நிறைவேற்றி விட்டாள்'' என்றார் தீக்ஷிதர்.

ரங்கமணியின் நினைவு பழைய சம்பவங்களில் புகுந்து திரிந்தது. திடீரென்று தீக்ஷிதரிடம் சொன்னான்: ''திரிவேணியின் கடைசி ஆசையைக் கூட நான் நிறைவேற்ற முடியாமல் போய் விடுமோ என்னவோ?''

''ஏன்...?'' என்று பதற்றத்துடன் கேட்டார் தீக்ஷிதர்.

''எனக்குத் தூக்குத் தண்டனை கிடைத்து விட்டால் பிறகு திரி



வேணியிடம் கொடுத்த வாக்கை நிறைவேற்றுவது எப்படி?''

''அப்படியெல்லாம் ஒன்றும் நடக்காது. பிரபல வழக்கறிஞர் உனக்காக வாதாடப் போகிறார்; தைரியமாக இரு'' என்றார் தீக்ஷிதர்.

''சர்தாரும் மற்றவர்களும் என்ன ஆனார்கள்?''

''ஒன்றுமே தெரியவில்லை. போலீஸ்காரர்கள் தேடிக் கொண்டிருக்கிறார்கள். தினமும் சர்தாரிடமிருந்து தகவலை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன். எங்கு போய் ஒளிந்து கொண்டிருக்கிறானோ?'' என்றார் தீக்ஷிதர் மிகுந்த வருத்தத்துடன்.

பின்னால் காலடிச் சத்தம் கேட்கவே இருவரும் திரும்பினார்கள். சிறை அதிகாரி வந்து நின்றார். ''நேரமாகி விட்டது'' என்றார். உடனே தீக்ஷிதர் எழுந்து ரங்கமணியிடம் விடைபெற்றுக்கொண்டு வெளியேறினார்.

சிறிது நேரத்துக்குப் பிறகு சிவானந்தமும், கமலவாசகியும் சிறைச் சாலைக்கு வந்தார்கள். சிவானந்தத்தைக் கண்டதும் ரங்கமணி அதிர்ந்து விட்டான்.

''என்ன இது...? ஏன் இந்தக் கோலம்?'' — பரபரப்புடன் கேட்டான்.

ரங்கமணியின் கரங்களை வாஞ்சையுடன் பற்றிக் கொண்டு உணர்ச்சி வசத்தால் பேச முடியாமல் நின்றான் சிவானந்தம்.

''என்ன இப்படிக் காந்திக் குல்லாயுடன்?'' என்று கேட்டான் ரங்கமணி, வியப்புடன்.

''வேலையை ராஜிநாமாச் செய்து விட்டேன்'' என்றான், சிவானந்தம். ரங்கமணி அடங்காத வியப்புடன் அவனை வெறிக்கப் பார்த்தான்.

''இதோ இவள், என் மனைவி கமலவாசகி'' என்று பக்கத்தில் ஒதுங்கி நின்ற கமலவாசகியை அறிமுகம் செய்துவைத்தான், சிவானந்தம். அதுவரை அவளைக் கவனியாத ரங்கமணி, திடுக்கிட்டுப் பக்கவாட்டில் திரும்பினான். திகைப்புடன் ஒரு கணம் சிலையாக நின்றான். கமலவாசகியும் அவனைப் பார்த்தபடியே நின்றாள். பிறகு, ரங்கமணி சமாளித்துக்கொண்டு, இரு கைகளையும் கூப்பினான். அவளும் பதிலுக்கு வணங்கினாள். இருவரும் ஏதும் பேச முடியாமல் ஊமையாக ஒருவரை ஒருவர் பார்த்தபடி நின்றார்கள்.

''என்ன அப்படிப் பார்க்கிறீர்கள்? விடுதலை இயக்க வீரர்களைப் படாத பாடு படுத்தியவள் இவள்தானா என்று பிரமிக்கிறீர்களா?'' என்று கேட்டுவிட்டுச் சிரித்தான், சிவானந்தம். ரங்கமணி தன்னைச் சமாளித்துக் கொண்டு பதிலுக்குச் சிரித்தான்.

''அந்தக் கமலவாசகி இப்போது இல்லை'' என்றாள் கமலவாசகி, ரங்கமணியைப் பார்த்துக் கொண்டே.

''உண்மைதான்! கல்லூரியில் பார்த்த கமலவாசகிக்கும், இப்போது பார்க்கும் கமலவாசகிக்கும் எத்தனை வித்தியாசம்!'' என்றான் ரங்கமணி. ஒரு கணம் சோகத்தின் சாயல் அவன் கண்களில் படர்ந்து மறைந்தது.

''ஓ... முன்பே தெரியுமா?'' என்று வியப்புடன் கேட்டான் சிவானந்தம்.

''சட்டக் கல்லூரியில் ஒரே வகுப்பில் படித்தோம்... ஜமீன்தார் முத்தையா பிள்ளையை நன்கு தெரியும்'' என்றான் ரங்கமணி.

''அப்படியா? அப்படியென்றால் என்னுடைய அறிமுகமே தேவையில்லையே!'' என்றான் சிவானந்தம், உற்சாகத்துடன்.

''அப்பா சௌக்கியம்தானே?'' — கமலவாசகியைப் பார்த்துக் கேட்டான் ரங்கமணி. கமலவாசகி தலையை அசைத்தாள். பிறகு சொன்னாள்:

''நீங்கள் மட்டும் பழைய ரங்கமணியாகத்தான் இருக்கிறீர்கள்.''

''இல்லை, இல்லை... பழைய ரங்கமணி செத்து விட்டான். இப்போது இங்கே நிற்பது வெறும் கூடுதான்'' என்றான் ரங்கமணி. அவன் கண்கள் கலங்கின. அதைக் கண்ட கமலவாசகியின் கண்களிலும் நீர் படர்ந்தது. தன்னையும் மீறி அழுகை பொங்கிக் கொண்டு வந்துவிடுமோ என்று பயந்தாள். முகத்தை வேறு பக்கம் திருப்பிக்கொண்டாள்.

''ஏன் இப்படித் திடீரென்று ராஜிநாமாச் செய்துவிட்டீர்கள்?'' என்று சிவானந்தத்திடம் கேட்டுப் பேச்சை வேறு திசையில் மாற்றினான், ரங்கமணி.

''நானும் ஓர் இந்தியன்தான் என்ற உணர்வு பெருகிவிட்டதால்தான்'' என்றான் சிவானந்தம். பிறகு சொன்னான்: ''உங்களுக்காகப் பிரபல வழக்கறிஞரை நியமித்திருக்கிறேன்.''

''உங்களுக்கு ஏன் இந்தச் சிரமம்? தீக்ஷிதர் ஒருவரை நியமித்திருக்கிறாரே?''

''இருக்கட்டுமே, இருவரும் உங்களுக்காக வாதாடட்டுமே!''

''எத்தனை பேர் வாதாடினால்தான் என்ன? என் விதியைத் தடுத்து நிறுத்தி விட முடியுமா?''

''அதைரியப்படக் கூடாது. நிச்சயம் வெற்றி கிடைக்கும்'' என்றான் சிவானந்தம். ரங்கமணி விரக்தியுடன் எங்கோ சூனியத்தை நோக்கினான்.

WS-107

**Myers**

OR

# Wasp

# PUMPS FOR EVERY PURPOSE











A wide range of pumps for every purpose, sturdily built and designed for optimum efficiency, by experts with an enviable background of over a hundred years' experience in manufacturing every type of pump—hand, power, pressure, turbine, centrifugal, rotary, etc. Also available pumps for pumping oil, chemicals, milk or fruit juices!

For your requirements, please contact:

**WATER SUPPLY SPECIALISTS PVT. LTD.**

Bombay-1, P. B. 684 • Calcutta-1, P. B. 424 • Madras-1, P.B. 1707 • New Delhi-1, 4 E/13 Jhandewalan Extn., Secunderabad (A.P.) 2670/74, Ghasmandy Rd.

''தண்டனையைப் பற்றிக் கவலை இல்லை. எந்தத் தண்டனையையும் ஏற்கத் தயாராயிருக்கிறேன். நான் இருந்து இனி யாருக்காக வாழப் போகிறேன்; எதை நினைத்து மகிழப் போகிறேன்? என்னுடைய ஒரே ஆசை மகாத்மாவை ஒரு முறை சந்தித்து விட வேண்டும் என்பதுதான்'' என்றான்.

''சர்தார் வீட்டிலிருந்த உங்களுடைய பெட்டி என்னிடம் பத்திரமாயிருக்கிறது.... சர்தாரின் வீட்டைச் சோதனையிட்ட போது கிடைத்தது. அதைப் போலீஸில் ஒப்படைக்கவில்லை'' என்றான் சிவானந்தம்.

''உள்ளேயிருந்த சாமான்கள்?'' என்று பரபரப்புடன் கேட்டான் ரங்கமணி.

''பத்திரமாயிருக்கின்றன. பாரதியாரின் பாடல்களும், இயேசுநாதரின் சிலுவைப் பொம்மையும் என்னிடம் பத்திரமாக இருக்கும்'' என்றான் சிவானந்தம்.

பேட்டி நேரம் முடிந்து விடவே, சிறை அதிகாரி அங்கு வந்து விட்டார். சிவானந்தமும் கமலவாசகியும், ரங்கமணியிடம் விடைபெற்றுக் கொண்டு வெளியேறினார்கள்.

சிறைக் கம்பிகளின் ஊடே ரங்கமணி வெளியே செல்லும் கமலவாசகியைக் கூர்ந்து பார்த்தான். அவளுடைய கதர் உடையும், மன மாற்றமும் அவன் மனத்தில் சாந்தியை உண்டாக்கின.

மூன்று மாதங்களுக்குப் பிறகு ஒரு நாள், வழக்குமன்றத்தில் பெரும் கூட்டம் கூடியிருந்தது. குற்றவாளிக் கூண்டில் ரங்கமணியும், முத்துவும் நின்று கொண்டிருந்தார்கள். வராந்தாவில் கூட்டம் நெரித்துக் கொண்டிருந்தது. ரங்கமணி வலப்புறம் திரும்பினான். பார்வையாளர்கள் உட்காருமிடத்தில், சர் டி. முத்தையா பிள்ளையும், தீக்ஷிதரும் உட்கார்ந்திருந்தார்கள். முத்தையா பிள்ளை சோகமே உருவமாய் அமர்ந்திருந்தார். தீக்ஷிதர் தைரியமூட்டும் பாவனையாக ரங்கமணியைப் பார்த்துப் புன்முறுவல் பூத்தார். சற்றுத் தள்ளி நெல்லையப்ப பிள்ளை கலங்கிய மனத்தவராய்ப் பரிதவிப்போடு அமர்ந்திருந்தார். பேரனைப் பார்த்துப் பார்த்து அவர் கண்களில் நீர் நிரம்பி வழிந்தது.

முதல் முயற்சி —4—




தாத்தாவைக் கண்டவுடன் ரங்கமணியின் கண்களும் கலங்கின. பாவம்! அந்தக் கிழவருக்கு எத்தனை வேதனைகள்! அவரை ஒரு நாளாவது நிம்மதியாக வாழ விட்டானா? அந்தக் குடும்பத்தில் அவர் கண்டதெல்லாம் திடுக்கிடும் சம்பவங்களும், வேதனைகளும் தான். கிழவரைப் பார்க்கப் பார்க்கப் பரிதாபமாக இருந்தது.

அன்று தீர்ப்பு சொல்லப்படும் நாள். அதைத் தெரிந்து கொள்ளத்தான் வழக்கு மன்றத்தில் அத்தனை கூட்டம் நெரித்துக் கொண்டிருந்தது.

பாவம், கிழவருக்கு ஆதரவில்லை. அவருடைய ஆசைகள் அனைத்தும் நொறுங்கிப் பொடிப் பொடியாகி விட்டன. ரங்கமணிக்குப் பெரிய தண்டனை ஏதாவது கிடைத்து விட்டால் கிழவரால் தாங்க முடியுமா?

''என்னைப் பேரனாக அடைந்த தலைவிதி அவரை வாட்டுகிறது. என்னால் யாருக்கும் லாபமில்லை....'' — ரங்கமணியின் மனம் புலம்பியது. ஒரு நீண்ட பெருமூச்சு விட்டுக் கொண்டே இடது பக்கம் திரும்பினான். சற்றுத் தள்ளிச் சிவானந்தமும், கமலவாசகியும் நின்று கொண்டிருந்தார்கள். இருவர் முகத்திலும் கவலை படர்ந்திருந்தது. அவர்களைப் பார்த்து இலேசாகச் சிரித்தான். பதிலுக்குப் புன்முறுவல் செய்த சிவானந்தத்தின் முகத்தில் இன்னும் அதிகமாக வேதனை தெரிந்தது.

அத்தனை பெரிய கூட்டத்தில் ரங்கமணியின் மனம், திரிவேணியைத் தேடி ஓடியது.

அவள் நினைவு வந்ததும் தன்னைச் சுற்றியிருந்த கூட்டத்தை மறந்துவிட்டான். சூழ்நிலையை மறந்துவிட்டான். ஆற்றுப் பாலத்துக்குப் பக்கத்தில் தன் மடியில் படுத்தவாறு அவள் உயிர் விட்ட சம்பவம் மட்டுமே அவன் நினைவில் தங்கியது. அவனையும் அறியாமல் கண்ணீர் தாரை தாரையாக வழிந்து தரையில் விழுந்து சிதறியது.

திடீரென்று சுய உணர்வு வந்தவனாய்க் கண்ணீரைத் துடைத்துக் கொண்டு சுற்று முற்றும் பார்த்தான். எல்லாரும் தன்னைக் கவனிப்பதைப் பார்த்ததும் துணுக்குற்றான். தண்டனைக்குப் பயந்து கண்ணீர் வடிக்கிறான் என்றுதான் மற்றவர்கள் நினைத்தார்கள். குற்றவாளிக் கூண்டில் அவன் பக்கத்தில் நின்ற முத்துகூட அப்படித்தான் நினைத்தான்.

''தைரியமாயிரு. அழாதே...'' என்றான் முத்து. அதைப் பற்றி அவன் கவலைப்படவில்லை. அவனை நன்கு தெரிந்தவர்களுக்கு நிச்சயம் அவன் வடித்த கண்ணீர் தண்டனையை நினைத்து அல்ல வென்று நன்கு தெரியும்.

திடீரென்று வழக்கு மன்றத்துக்குள் பரபரப்புத் தோன்றியது. நீதிபதி தம் ஆசனத்தில் வந்து அமர்ந்தார். எல்லாருடைய கண்களும் அவரையே துளைத்தன. தீர்ப்பை வாசிக்க அவர் ஆரம்பித்தவுடன், வழக்கு மன்றம் முழுவதும் நிசப்தம் நிலவியது. முதலில் முத்துவுக்கு ஏழு வருஷக் கடுங்காவல் சிறைத் தண்டனை என்று வாசித்தார். அதைக் கேட்டதும் முத்து உரத்த குரலில், ''வந்தே மாதரம்'' என்று பதில் கொடுத்தான். பிறகு ரங்கமணியின் தண்டனையை வாசித்தார்.

''இரண்டாவது எதிரிக்கு ஆயுள் தண்டனை விதித்திருக்கிறேன்'' என்று நீதிபதி கூறியதும் வழக்கு மன்றமே ஸ்தம்பித்து விட்டது போலிருந்தது. எல்லாருடைய கண்களும் ஒரே சமயத்தில் ரங்கமணி மீது திரும்பின.

ரங்கமணியின் உதட்டில் புன்முறுவல் தோன்றியது. ஒரு முறை சுற்று முற்றும் பார்த்தான். தீக்ஷிதரின் கண்கள் கலங்கிப் போயிருந்தன. சர் டி. முத்தையா பிள்ளை கைக்குட்டையால் கண்ணீரைத் துடைப்பது தெரிந்தது. சிவானந்தம், கண்ணீரை அடக்கச் சிரமப்பட்டுக் கொண்டிருந்தான். கமலவாசகி கைகளினால் முகத்தை மூடிக் கொண்டாள்.

பரபரப்புடன் தாத்தா இருந்த பக்கம் திரும்பினான், ரங்கமணி. அவர் சிறிது நேரம் ஒன்றும் பேச முடியாமல் கல்லாய்ச் சமைந்திருந்தார். போலீஸ்காரர்கள் ரங்கமணியின் கைகளில் விலங்கிட்டு அழைத்துச் செல்லும்போது, ''ரங்கமணி...! என்னை விட்டுவிட்டுப் போகிறாயே...'' என்று கதறினார். பக்கத்திலிருந்த தீக்ஷிதர் ஆதரவுடன் கிழவரை அணைத்தவாறு வெளியே அழைத்துச் சென்றார்.

வழக்கு மன்றத்திலிருந்து வெளியே வந்த ரங்கமணி தீக்ஷிதரைப் பார்த்து, புன்னகை புரிந்தான். அவன் சொன்னான்:

''கலங்காதீர்கள் தீக்ஷிதர்வாள். பயங்கரவாதிக்கு ஏற்ற தண்டனைதான் கிடைத்திருக்கிறது. மகாத்மா காந்தியைச் சந்தித்தால் எனக்காக அவரிடம் மன்னிப்புக் கேளுங்கள். ரங்கமணியைத் திரிவேணி மாற்றி விட்டாள் என்ற செய்தியையும் சொல்லுங்கள். மகாத்மா என்னை மன்னிப்பார் என்றுதான் நினைக்கிறேன்.''

இதைக் கேட்டுத் தீக்ஷிதர் கண் கலங்கி நின்றார்.

''தாத்தாவை நீங்கள்தான் கவனித்துக் கொள்ள வேண்டும். அவருக்குத் துணை யாருமில்லை'' என்று கூறிவிட்டுப் போலீஸ் லாரியை நோக்கி நடந்தான் ரங்கமணி. போலீஸ் லாரியில் ரங்கமணி ஏறப்போன சமயம் பக்கத்தில் சர் டி. முத்தையா பிள்ளை நின்று கொண்டிருந்ததைப் பார்த்தான். இலேசாகச் சிரித்தான். பிறகு சொன்னான்:

''பொய்யாக நூறு வருஷங்கள் வாழ்வதை விட உண்மையாக ஒரு நாள் வாழ்ந்தாலும் போதும் என்பீர்களே; இனிமேல்தான் என்னுடைய உண்மையான வாழ்க்கை ஆரம்பமாகப் போகிறது.''

இதைக் கேட்டு முத்தையா பிள்ளை பொங்கிப் பொங்கி அழுதார். கைக்குட்டையால் வாயைப் பொத்திக் கொண்டார். ரங்கமணி சிரித்த முகத்துடன் லாரிக்குள் ஏறினான்.

உள்ளே உட்கார்ந்த பிறகு, சன்னல் வழியாக வெளியே பார்த்தான். லாரி நகரத் தொடங்கியதும் கையை அசைத்து விடை பெற்றான். ''வந்தே மாதரம்'' என்று தீக்ஷிதர் கோஷித்தார். கூட்டம் உடனே, ''வந்தே மாதரம்'' என்று அந்த வட்டாரமே அதிரும்படி ஆதி கூறி, ரங்கமணியை வழியனுப்பி வைத்தது.

**(தொடரும்)**



ஹெஸ் தரும் புதிய
'ஸ்டெல்லா' கடிகாரம்

# கைதேர்ந்த ஐரோப்பியக் கலைநுட்பத்தைப் பின்பலமாகக் கொண்டது

# ஹெஸ்

## அலாரம் கடிகாரம்

### கணக்குநுட்பமான அமைப்பு...காலமெல்லாம் உழைப்பு

கணக்கு நுட்பமான கருவியாகிய கடிகாரத்திற்கு ஆதாரம்: கைதேர்ந்த கலைநுட்பம். ஹெஸ் கடிகாரமே வேண்டுமெனக் கேளுங்கள். ஜெக்கோஸ்லொவேக்கிய நாட்டுக்ரோனடெக்னாவின் ஒத்துழைப்போடு, சர்வதேசத் தர விதிப்புகளுக்கு இணங்கத் தயாரிக்கப்பட்டுள்ளது. ஹெஸ் என்றால் ஆணித்தரமான கணக்கு நுட்பம். ஆண்டாண்டு உழைப்புறுதி. நயமான விலைகளிலே நானாவித மாடல்கள்.

நேர்மை தவறாது நேரம் கூறும்
நிகரில்லாத ஹெஸ் கடிகாரம்!




லின்டாஸ்-HES.6-77 TM

முழுத் தகவல் பெற எழுதவும்

ஹெஸ் லிமிடெட், ஜோகேஷ்வாரி, பம்பாய் - 60



## பெண் என்றால் பெண்

சரோஜாதேவி, விஜயகுமாரி இருவரும் கதாநாயகிகள். ஜெமினிகணேசன், அசோகன் இருவரும் கதாநாயகர்கள். விஜயகுமாரி (லேடி டாக்டர்) பாபுவைக் காதலிக்கிறார்; ஆனால் அம்மாவின் வாக்கைக் காப்பாற்றக் காதலனைக் கைவிட்டு அத்தானை மணக்க முடிவு செய்கிறார்; கைவிடப்பட்ட பாபு (ஜெமினி கணேசன்) அதிர்ஷ்டக்காரன்! அவனுக்குச் சரோஜாதேவி கிடைக்கிறாரே! விஜயகுமாரியின் காதல் கிடைத்தும் அத்தான் (சங்கர்) அசோகனுக்கு அது கைகூடவில்லை. கைகள் இல்லாதவனுக்கு எப்படிக் காதல் கைகூடும்?

கைகூடாத காதலுக்காக இரங்கிக் கண்ணீர் விட்டுக் காலமெல்லாம் கன்னி விரதம் பூணுவதுதான் தமிழ்த் திரைக்கதையின் கதாநாயகிகளின் மரபு. அம்மரபு இப்படத்தில் மாறி விட்டது. காதலித்தவர்கள் தங்கள் காதலை மறந்து 'ஞாயமாக'ப் புதுக் காதலில் இறங்கி விடுகிறார்கள்! (என்ன கதையோ, என்ன கஷ்டமோ!)

சங்கர் ரயில் விபத்தில் சிக்கியது கேட்டு அவன் தந்தை இறந்து விடுகிறார். லேடி டாக்டரின் அன்பைப் பெற்றும் முடவனான தன்னை அவள் அன்புக்கு ஈடுபடுத்த முடியாமல் இறந்து விடுகிறான் சங்கர். லேடி டாக்டரும் துயரத்தில் அடிபட்டு இறந்து விடுகிறாள். மதராஸ் பாஷையில் சொல்வதானால் படம் முழுவதும் 'சாவுக் கிராக்கி'.

லேடி டாக்டர் சாகும் காட்சியை எவ்வளவு முடியுமோ அவ்வளவு நீட்டிப் பொறுமையைச் சோதிப்பது சகிக்க முடியாத கொடுமை!

நடிப்பில் சரோஜா தேவியும், விஜயகுமாரியும் ஒருவருக்கொருவர் சளைக்கவில்லை. இரண்டு பாத்திரங்களிலும் ஏமாற்றம் கலந்திருந்தாலும், நடிப்பில் அவர்கள் நம்மை ஏமாற்றி விடவில்லை.

வில்லன் அசோகன் நல்லவனாக வருகிறார். ரயில் விபத்தில் கைகளை இழந்து சங்கர் படுகிற துன்பத்தையும், அவன் மனத்துள் கொந்தளிக்கும் வேதனைப் புயலையும் அருமையாக வெளிப்படுத்துகிறார்.

ஆரம்பத்தில் சிரிக்கும் பாத்திரமாக வரும் ஜெமினி கணேசன் கடைசியில் அழுது படம் பார்ப்பவர்களையும் கண் கலங்க வைக்கிறார்.

எப்பொழுதும், எல்லாப் படங்களிலும் திரை மாதாக்களுக்கு வரும் வேதனையும், துயரமும் பண்டரிபாயை விட்டு விடுமா?

ஐந்து பாடல்கள் இருக்கின்றன. ஆனால் கேட்டு மகிழ ஒரு பாடல்கூட இல்லை.

வேதனை, சோதனை, சோகம், சங்கடம் இவைகளெல்லாம் தீரத் தங்கவேலு, 'சோ', ஏ. கருணாநிதி ஆகியவர்களின் ஹாஸ்ய நடிப்பு நன்கு கைகொடுத்து உதவுகிறது.

ஏ.எல்.எஸ். புரொடக்ஷன்ஸாரின் 'பெண் என்றால் பெண்' களிப்பூட்டிக் கலங்க வைக்கும் கண்ணீர்க் காவியம்.

## அத்தியாயம் 13

இரவு ஒன்பது மணிக்குச் சந்தானம் சாப்பிட உட்கார்ந்தபோது, என்று மில்லாதபடி பாகீரதி அவனிடம் பேச்சுக் கொடுத்தாள்.

''சந்தானம்! நீ என்ன நினைப்பியோ, என்ன சொல்லுவியோ பயமாகத்தான் இருக்கு... இருந்தாலும் கேட்கிறேன்...'' என்று ஆரம்பித்தாள்.

''தயக்கமில்லாமல் சொல்லுங்கோ, மாமி!''

''இப்போ சீதாவைப் பத்திய கவலை எனக்கு இல்லே. ஒரு மாசத்திலோ ரெண்டு மாசத்திலோ அவள் கழுத்திலே தாலி ஏறிடும். இந்த ஜானு தான் என் மனசிலே முள்ளாக இருக்கிறாள். என்ன செய்யறது என்றே புரியவில்லே...''

''அவளுக்கும்தான் கலியாணம் ஆகப் போகிறதே! அவளே ஒரு பிள்ளையைத் தேடிக் கொண்டு விட்டாளே!''

''அதுதான் பயமா யிருக்கு. ராஜாவுக்கு நல்ல நடத்தை இல்லேன்னு கேள்விப்பட்டேன்....''

''அப்படியா?''

''ஏன், உனக்குத் தெரியாதா?''

''எனக்கு எவ்வளவோ தெரியும்!'' என்றான் சந்தானம், சாப்பிட்டுக் கொண்டே.

''என்கிட்டே சொல்லமாட்டாயா?''

''ரகுபதியைப் பத்தி நான் சொல்லி அனுபவிச்சது, போதாதா மாமி!''

பாகீரதி வெகுண்டாள். ஆனால் சந்தானம் உண்மையைத்தானே சொல்லுகிறான்?

தன் கோபத்தைஅடக்கிக்கொண்டே, ''அதுக்குத்தான் நான் உன்கிட்டே மன்னிப்புக் கேட்டேனே... இந்த ராஜா எப்படிப்பட்டவன்...?'' என்று பாகீரதி கேட்டாள்.

''கோதண்டராமனிடம் அந்தரங்கக் காரியதரிசியாக இருந்தவன். ஆனா அதனாலேயே முதலாளியின் குணம் இருக்கும்னு சொல்லக் கூடாது...''

''ராஜாவை நெனைச்சாலே எனக்கு என்னமோ பிடிக்கவில்லே... இவ்வளவுக்கும் அவனைப் பற்றி ஜானு சொல்லி_தான் எனக்கே கொஞ்சம் தெரியும். தான் திருந்தி விட்டதாக அவளிடம் சொல்லி யிருக்கிறானாம்...''

''என்கிட்டேயும் அப்படித்தான் ஜானு சொன்னாள்.''

''ராஜாவின் அம்மாவுக்கும் அவனுக்குக் கல்யாணம் பண்ணி வைக்க விருப்பமில்லையாம்!''

சந்தானம் ஆச்சரியத்துடன் பாகீரதியைப் பார்த்தான்.

''அப்படியா? அதிசயமா இருக்கே!''

''தன் பிள்ளை திருந்துவான் என்கிற நம்பிக்கை அவளுக்கு இல்லேபோலிருக்கு. பெண்டாட்டி என்கிற கால் கட்டு வந்தாலும் அவன் தன் சுபாவப்படிதான் இருப்பான்னு அவள் நினைக்கிறாள்!''

''இதெல்லாம் யார் சொன்னா?''

''ஜானுதான்.''

''அவளுக்கு யார் சொன்னா?''

''ராஜாவின் அம்மாதான்.''

''அப்போ இந்தக் கல்யாணம் வேண்டாம்னுதான் எல்லோர் மனசிலேயும் இருக்கு...''

''ஆனால், ஜானு அதையும் வெட்டவெளிச்சமாய்ச் சொல்ல மாட்டேன்

மூன்றாவது பரிசு நாவல்

# மணக் கோலம்

பி.வி.ஆர்



என்கிறாள். ஒருவேளை நீ சொன்னால் அவள் கேட்டாலும் கேட்கலாம். உன் பேரிலே அவளுக்கு ரொம்ப மதிப்பு இருக்கு...''

சாப்பிட்டுவிட்டு எழுந்திருக்கையில், சந்தானம் நிறுத்தி நிதானமாகப் பாகிரதியைப் பார்த்துக் கூறினான்: ''மாமி! ராஜாவைப் பற்றி எனக்குத் தெரிஞ்சதையெல்லாம் சொல்லி விடுவேன்... ஆனா அதுக்கு அப்புறமும் கலியாணம் நடந்து விட்டால் உங்க மாப்பிள்ளையை நீங்க பார்க்கிறபோதெல்லாம் நான் சொன்னதுதான் நினைவுக்கு வரும்.... அப்போ உங்க மனசு வேதனைப்படும்.''

''பரவாயில்லை, சொல்லு.''

''என்னை மன்னித்து விடுங்கள்!''

சந்தானம் கை கழுவச் சென்றான்.

அவன் திரும்பி வருகையில் மீண்டும் ஏதோ கேட்க வேண்டும்போல் பாகிரதிக்குத் தோன்றியது. ஆனால் அவனுடைய முக பாவனையைக் கண்டதுமே தன் எண்ணத்தை அவள் கைவிட்டு விட்டாள்.

சந்தானத்தின் மனத்தில் கேவலம் 'இரண்டு ரூபாய் சாம்பிராணி' புகைந்து கொண்டிருப்பது அவளுக்கு எப்படித் தெரியும்? மறு நாளிலிருந்து தினமும் அகிலாவும் சந்தானமுமாகப் பழைய கணக்குகளையெல்லாம் சோதனை செய்யப் போகிறார்கள் என்பதையும் எப்படி அறிவாள்?

ராஜா கொழும்புக்குப் போவதாகச் சொல்லி வெளியேறியவன்தான். எட்டு நாட்களாக அவனிடமிருந்து எந்தத் தகவலும் வரவில்லை.

''அவன் ஸிலோனுக்கே போயிருக்க மாட்டான்!'' என்ற அகிலா, ரவி பதில் சொல்வதற்குள் டெலிபோனை எடுத்தாள்.

''என்ன செய்யப் போகிறாய், அகிலா?'' என்று கேட்டான் சந்தானம்.

''ஏர்லைன்ஸுக்குப்போன் பண்ணினால் விஷயம் புரியறது!'' என்றாள் அவள்.



''கொஞ்சம் பொறு... நீங்க ரெண்டு பேருமா இரும்புப் பெட்டியைத் தேடியாகிவிட்டது, இல்லையா?'' என்று கேட்டான் சந்தானம்.

''ஆமாம்... அப்பா அதிலே எவ்வளவு வைத்திருந்தார்னு கூட எங்களுக்குத் தெரியாது!'' என்ற ரவி, ''உயிலிலேயும் தொகையை அவர் குறிப்பிடவில்லை!'' என்றான்.

திடீரென்று, ''அப்பா ஆஸ்பத்திரியிலே கிடக்கும்போது, நானும் அம்மாவும் அங்கே இருக்கிற சமயத்திலே ராஜா வந்திருக்கிறான்.... ஆனா இன்னிவரையிலே எதற்கு வந்திருந்தான்னு தெரியாது...'' என்று அகிலா பழைய சம்பவத்தை நினைத்தவளாய்க் கேட்டாள்.

''அதைப் பற்றி அப்புறமாகத் திர விசாரிக்கலாம்'' என்ற சந்தானம், ''இப்போ நாம் பாங்கி ஏஜண்டை உடனடியாகப் போய்ப் பார்த்தாகணும்!'' என்றான்.

மூவரும் கிளம்பினார்கள்.

பாங்கியின் கணக்குப்படி, இறந்து போன அன்று கோதண்டராமன், இரண்டு



செக்குகளில் கையெழுத்திட்டிருக்கிறார். லட்சத்து ஐம்பதாயிரம் வருமான வரி இலாகாவுக்குக் கொடுக்கப் பட்டிருக்கிறது. இன்னொரு செக்கை, எப்போதும் பணம் வாங்க வரும் ராஜாதான் லட்சத்து முப்பதாயிரம் ரூபாய்க்கு மாற்றி ரொக்கமாக எடுத்துக் கொண்டு போயிருக்கிறான். பாங்கி திறந்த உடனேயே எட்டு மணிக்கு அவன் பணத்தை வாங்கி யிருக்கிறான். அப்போது கோதண்டராமன் மரணத்தைப் பற்றி யாருக்குமே தெரியாது. யாருடைய பேருக்கும் அவன் அந்தப் பணத்தால் வெளியூர்களுக்கு அனுப்ப 'டிராப்டுகள்' வாங்கவில்லை.

கோதண்டராமனின் பெயருக்குப் பாக்கி யிருக்கும் தொகை அறுபத்தி யிரண்டாயிரம். பாகீரதிக்குச் சேர வேண்டிய ஐம்பதாயிரம் போனால், ரவிக்கு மிஞ்சுவது பன்னிரண்டாயிரம்.

''கண்ணிலே நன்னு மிளகாய தூவி யிருக்கிறான்!'' என்ற அகிலா, பாங்கியில் இருந்தவாறே ஏர்லைன்ஸுக்குப் போன் செய்தாள். ராஜாங்கம் என்ற பெயரிலோ, ராஜா என்ற பெயரிலோ யாரும் கடந்த பத்து நாட்களில் இலங்கைக்குச் செல்லவில்லை என்ற தகவல்தான் கிடைத்தது.

ரவிக்கு மேற்கொண்டு என்ன செய்வது என்று புரியவில்லை. ஒன்றரை லட்சத்துக்கு மேலாக ராஜா களவாடியிருக்கிறான் என்று நிதர்சனமாகத் தெரிவதால் எப்படி அவனைக் கண்டு பிடித்துப் பணத்தை மீட்பது என்று அவன் யோசித்தான்.

''போலீஸிலே கம்ப்ளெய்ண்டு கொடுக்க வேண்டியதுதான்'' என்றாள் அகிலா.

''அதுதான் சரி. எவ்வளவு சீக்கிரம் அவன் பிடிபடுகிறானோ அவ்வளவுக்கு நல்லது. பணத்தை முழுதும் அவன் கன்னா பின்னா என்று செலவழித்தபின் ஆள் கிடைத்தாலும், பணம் கிடைக்காதே!'' என்றான் சந்தானம்.

''நாம் அவசரப்படக் கூடாது. அவன் எப்படியும் மெட்ராஸுக்கு வந்தாகணும்!'' என்றான் ரவி.

''எதற்கு?'' — அகிலா.

''ஜானுவின் பின்னாலேயே சுற்றி யிருக்கிறான். அவளை அழைத்துக் கொண்டுபோக வந்துதானே தீரணும்?''

''உனக்குப் பைத்தியம்தான் பிடித்திருக்கு அண்ணா... ராஜாவாவது மெட்ராஸ் வரவாவது? தலை காட்ட மாட்டான். போலீஸிலே 'கம்ப்ளெய்ண்ட்' கொடுத்து விட்டுத்தான் வீட்டுக்குப் போகணும்...''

''அவர்கள் ஆமை வேகத்தில் நகருவார்கள்...'' என்ற ரவி, ''வேறு வழியில்லையா சந்தானம்?'' என்று கேட்டான்.

''அகிலா சொல்றபடிசெய்வோம்.''

அன்றே போலீஸில் புகார் செய்தார்கள்.

அன்று இரவே திருவான்மியூரில் சோதனை நடந்தது. ஐந்து ரூபாயும் பத்து ரூபாயுமாகச் சுமார் இரண்டாயிரம் கைப்பற்றப்பட்டது. ஸிலோன் போகிறேன் என்று போன ராஜா இன்னும் திரும்பி வரவில்லை என்று லட்சுமி அம்மாள் போலீஸிடம் தெரிவித்தாள்.

மறு நாளே எல்லாத் தினசரிகளிலும் ராஜா செய்த மோசடி வெளியாகியது.

அதை ஜானுவும் பார்த்தான்.

ஆந்திராவில் ஒரு சிற்றூரில் இருந்த ராஜாவும் செய்தியைப் படித்தான்.

மறுநாளே அவன் வாங்கியிருந்த மோட்டார் அந்த ஊரை விட்டு வேறு ஓர் ஊருக்கு ஓடியது.

நாட்கள் ராஜாவைப் பொறுத்த வரையில் ஆமை போல நகர்ந்தன. ஓர் ஊரிலும் அவன் ஓர் இரவைக் கூடக் கழிக்கவில்லை. தமிழ் நாட்டின் எல்லைக்குள் போவதற்கே அவன் பயந்தான். குண்டூர், அனந்தப்பூர், பெல்லாரி என்று எத்தனையோ ஊர்களில் அவன் வட இந்தியனைப்போல் ஷெர்வாணியில் காட்சி யளித்தான். முகத்தில் சிறு தாடியும், கறுப்புக் கண்ணாடியும் அவனுடைய அடையாளங்களை ஒரு வாறு மறைத்தன. அவனுடைய சரளமாகப் பேசும் சுபாவமும் அமெரிக்கையாக நடந்து கொண்ட தன்மையும் யாருடைய மனத்திலும் எந்த விதமான சந்தேகத்தையும் உண்டாக்கவில்லை.

அவன், ரவி போலீஸாரிடம் புகார் செய்ய மாட்டான் என்று நினைத்தது அவனுடைய திட்டத்தின் முதல் தோல்வியோ என்றுகூட எண்ணினான். ஆனால் நாள் செல்லச் செல்ல, அவனைப் பற்றி வெளியான செய்தி கால வெள்ளத்தில் அமிழ்ந்து போகப் புதுத் துணிவும் தைரியமும் அவன் உள்ளத்தில் பிறக்கலாயின. வீட்டில் புகுந்து போலீஸார் அம்மாவுக்காக வைத்து விட்டு வந்த ரொக்கத்தைக் கைப்பற்றி விட்டார்கள் என்று அறிந்தபின் ஒரு சின்னஞ் சிறு ஊரிலிருந்து தாயாருக்கு நூறு ரூபாய் அனுப்பினான். அவன் தன் பெயரைக் கூட அப்போது வெளியிடவில்லை.

இரண்டு மாதங்கள்!

சந்தன மண்டலத்துள்
அந்தரங்க வரவேற்பு !

தூய சந்தனத்தின்
**புது** மணங் கமழ்
# மகாராணி




**மகாராணி** : பேரசி போன்ற மென்மை யழகுற உங்கள் மேனியைப் பேணும் சோப்

லின்டாஸ்-MHR.4.140 TM

இந்துஸ்தான் லீவர் லிமிடெட்டின் தரமான தயாரிப்பு.

# விஞ்ஞானிகளின் கண்டுபிடிப்பு

## வலியை அதி வேகமாக வெளியேற்ற




# மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ'

இப்பொழுது முதன்முதலாக இந்தியாவில் வழங்கப்படுகிறது

**வலிதான் எங்கள் பிரச்னை:** 'ஆஸ்ப்ரோ' ஆராய்ச்சிக் கழகத்தில் வலியைப் பற்றிய ஆராய்ச்சிகள் செய்துவரும் விஞ்ஞானிகள் வலியை வேகமாக வெளியேற்றுவதற்கான புதிய வழியைக் கண்டுபிடித்துள்ளனர் — அதுதான் புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ'.

**மைக்ரோஃபைன்ட் என்றால் என்ன?** புதியதொரு விசேஷமான செய்முறையின் மூலம், 'ஆஸ்ப்ரோ'வில் உள்ள வலிநிவாரணப் பொருளை மேலும் 30 மடங்கு நுணுக்கமாக்கியிருப்பதைத்தான் மைக்ரோஃபைன்ட் என்கிறோம். இப்பொழுது ஒவ்வொரு மாத்திரையிலும் இந்த வலிநிவாரணப் பொருளின் சுமார் 15 கோடி நுண்ணிய அணுக் கூறுகள் அடங்கியிருக்கின்றன. இதன் விளைவாக, முன்பைவிட இருமடங்கிற்கும் அதிகமான வலிநிவாரணச் சக்தி, மும்மடங்கு வேகமாக இயங்கி வலியைத் துரிதமாக வெளியேற்றிவிடுகிறது.

**வேகமாகச் செயல்புரிகிறது—நீடித்த பயனைத் தருகிறது:** புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ'வில் உள்ள சுறுசுறுப்பாக இயங்கும் வலிநிவாரணப் பொருள், மிகவும் சுலபமாகவும், துரிதமாகவும் இரண்டறக் கலந்து உங்கள் உடலில் 5 முதல் 7 மணி நேரம் வரை தங்கியிருக்கிறது. இதனால் தான் மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ' வலியை அதி வேகமாக வெளியேற்றி, நீண்ட நேரம் பயனளிக்கிறது.

**உட்கொள்ளச் சுலபமானது:** புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ'வை வெறும் மாத்திரையாகவோ, தண்ணீரில் கலந்தோ, ஒரு டம்ப்ளர் தண்ணீருடனோ அல்லது சூடான பானத்துடனோ—எப்படி வேண்டுமானாலும் சாப்பிடலாம்.

**கீழ்க்கண்டவைகளுக்கு புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ' சாப்பிடுங்கள்:** சோர்வு • தலைவலி • உடல் வலி • பல்வலி • மூட்டுவலி • ஜுரவேகத்துடன் கூடிய ஜலதோஷம் • ஃப்ளூ • டெங்கு • தொண்டை அழற்சி.

**சாப்பிடும் அளவு:** வயது வந்தவர்கள்: இரண்டு மாத்திரைகள். தேவையானால் மீண்டும் சாப்பிடவும். குழந்தைகள்: ஒரு மாத்திரை அல்லது உங்கள் டாக்டர் சொல்படி.

புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ' செயல்புரியும் விதம்




ஒரு மாத்திரையில் உள்ள அணுக்கூறுகள் எவ்வளவுக்கெவ்வளவு பெரியதாக உள்ளதோ, அது உங்கள் உடலில் கலப்பதற்கு அவ்வளவு அதிகமான நேரமாகிறது—நீங்கள் வலியிலிருந்து நிவாரணம் பெறவும் அவ்வளவு அதிகமான நேரம் காக்கவேண்டியிருக்கிறது.




மைக்ரோஃபைன்ட் ஆக இருப்பதனால் புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ'வின் ஒவ்வொரு மாத்திரையிலும் சுமார் 15 கோடி நுண்ணிய அணுக்கூறுகள் அடங்கியுள்ளன—எனவே, அது மேலும் துரிதமாக இரண்டறக் கலந்து, விரைவில் நிவாரணம் அளிக்கிறது.

---

புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ' இப்பொழுது கிடைக்கும் அதிநவீனமான வலிநிவாரணியாகும்.








புதிய

மைக்ரோஃபைன்ட்

**'ஆஸ்ப்ரோ'**

அதி வேகமாக
வலியை வெளியே
இழுத்துவிடுகிறது

நிக்கோலஸ் தயாரிப்பு



"நீ பிக்பாக்கெட் அடிக்கவில்லே நிரபராதின்னு நான் காரசாரமா வாதாடினபோது ஜட்ஜைக் கவனிச்சியா?"

"கவனிச்சேன் சார்! அடேயப்பா! அவர் பாக்கெட்டில் எவ்வளவு பெரிய மணிபர்ஸ் வச்சிருக்கார் சார்!"

இந்த இரண்டு மாதங்கள் ராஜாவுக்கு இரண்டு யுகங்கள் போலத் தோன்றின. இரவும் பகலும் அவன் மனம் தாயாரைப் பற்றியும் ஜானுவைப் பற்றியுமே எண்ணி எண்ணி அலைந்து கொண்டிருந்தது. தினம் தினம் சென்னையிலிருந்து வெளியாகும் எல்லாத் தினசரிகளையும் வாங்கிப் பார்த்தான். ஒவ்வொரு நாளும் அவனுடைய நம்பிக்கையும் தைரியமும் அதிகமாகியது. போலீஸாரின் ஆரம்ப ஆர்வம் குறைந்துவிட்டது என்று அவனே தன்னுள் கூறிக் கொண்டான். இருந்தாலும் உடனடியாகச் சென்னைக்குச் செல்ல அவனுக்குப் போதிய துணிவு வரவில்லை.

அவன் போலீஸாரின் பிடியில் சிக்கிக் கொள்ளாமல் இருக்க ஒரே ஒரு வழிதான் இருப்பதாகத் தோன்றியது. எவளைப் பற்றி அவன் தினம் தினம் நினைந்து மனம் உருகுகிறானோ அவள்—அந்த ஜானு — ஒருத்திதான் அவனைக் காப்பாற்ற முடியும். அவளை எப்படிச் சந்திப்பது? சந்தித்து விட்டால் அவள் எப்படி முரண்டினாலும் அவளைத் தன் வசப்படுத்தி விடலாம்! இருவருக்கும் கல்யாணம் ஆகிவிட்டால் ரவி கண்டிப்பாகச் சீதாவை உத்தேசித்தாவது கேஸை வாபஸ் பெறுவான்! அவனிடமிருந்து வேறு வழியில் பணத்தைத் திருப்பிப் பெற எண்ணுவான்! சீதாவை மணம் செய்து கொள்ளுகிறவன், ஒரு நாளும் அவளுடைய தங்கையின் கணவன் ஒரு மோசடிக்காரன், திருடன் என்று சமூகம் தூற்ற இடம் கொடுக்க மாட்டான்......

பம்பாயின் நாற்பது லட்சம் பேர்களில் ராஜாவை யாரும் கவனிக்கவில்லை. அவனுடைய ஹிந்தியைக் கேட்டவர்கள் யாருமே அவனை ஒரு தமிழன் என்று சந்தேகிக்கவே முடியாமற் போயிற்று. மேலும் பம்பாயிலும் அவன் ஒரே இடத்தில் பல நாட்கள் சேர்ந்திருக்கவில்லை. ஒவ்வொரு பகுதியிலுமாகத் தள்ளிக்கொண்டே போனான்.

அவன் துணிந்து பகலிலும் திரிய வேறு ஒரு காரணமும் இருந்தது. அவனுடைய போட்டோ ஒன்றுகூட வீட்டில் இல்லை. கல்லூரியில் படித்துக் கொண்டிருக்கையில் கூட, கடைசி வருட விழாவின்போது அவன் போட்டோவில் உட்கார இயலாமல் போய் விட்டது. போலீஸார் போட்டோவை வைத்துக் கொண்டு அவனைத் தேடுவது என்பது இயலாத காரியம். இலங்கை செல்ல எடுத்துக்கொண்ட போட்டோ அவனிடம்தான் இருந்தது.

அவன் மனத்தில் திட்டம் உருவாகியது. இன்னும் ஒரு மாதம் இப்படியே அவன் பல ஊர்களில் திரிந்து விட்டு, சாயங்கால வேளையில் சென்னையை அடைய வேண்டும். ஜானுவைச் சந்தித்து, அவசியம் ஏற்பட்டால் அவளைப் பலாத்காரமாகவே காரில் ஏற்றிக் கொண்டு மறு கணமே சென்னையை விட்டு அவன் கிளம்பி விட வேண்டும். அப்படி ஜானு கிடைக்காமல் போனால்? இலங்கைக்குச் செல்ல பாஸ்போர்ட்டு கையிலேயே இருக்கிறது!

நல்லவேளையாக அவன் போட்டிருந்த பணத்தை யெல்லாம் சென்னையிலிருந்து புறப்படுவதற்கு முன்னமேயே எடுத்தாகி விட்டது. வேறு பெயரில் பம்பாயில் அப்பணம் பரவிக் கிடக்கிறது. எப்போது வேண்டுமானாலும் அவசியத்துக்கு ஏற்ப அவன் வாங்கிக்கொள்ளலாம்.

நாட்கள் நகர்ந்தன.

ராஜாவின் துணிவும் அதிகரித்துக் கொண்டே வந்தது. ஜானு மனைவியாக வந்து விட்டாள், அவளே ரவியின் காலில் விழுந்து கணவனுக்காகக் கதறுவாள். சிறைக்குச் செல்லாமலிருக்க அவளுடைய மஞ்சள் கயிறு ஒன்றே போதும். ராஜா ரவியை நன்றாக அறிவான். என்னதான் ராஜாவை அவன் வெறுப்பது உண்மை என்றாலும், பழி வாங்குகிற எண்ணமோ, ராஜாவைச் சிறைக்குள் தள்ளிவிட வேண்டும் என்ற ஆத்திரமோ அவனிடம் இருக்காது.

அப்படியே இருந்தாலும் சீதா தன் தங்கைக்காக வேண்டியாவது ரவியிடம் மன்றாட மாட்டாளா?

ராஜாவின் சிந்தனையில் என்னென்னவோ எண்ணங்கள் உதயமாகி, திட்டங்கள் பிறந்தன. ஜானுவுக்கும் அவனுக்கும் கல்யாணமாகி விட்டால், இருவருமே வட நாட்டுக்கு ஓடிவிடுவார்கள். ஏதோ ஓர் ஊரில் தம்பதியாக வாழ்வார்கள்.... காலம் அவன் செய்துள்ள மோசடியை மறக்கும். அவன் இரண்டு வருஷங்களோ மூன்று வருஷங்களோ பயத்துடன் வாழ்ந்தாலும் அப்புறம் நிம்மதி கண்டிப்பாக உண்டாகும்.

அந்த நிம்மதியை அவனுக்கு அளிக்கக்கூடியவள், அவன் சிறைக்குச் செல்லாமல் இருக்க உதவக்கூடியவள் ஒருத்திதான். அந்த ஒருத்திதான் அவனுக்குப் புது வாழ்வு அளிக்க முடியும்!

அவள்தான் ஜானு!

சந்தானத்தின் உதவியுடன் ரவியும் அகிலாவும் கோதண்டராமன் கம்பெனியின் கணக்குகளையெல்லாம் ஆதியோடு அந்தமாகப் பரிசீலனை செய்து பார்த்தார்கள். லட்சத்து முப்பதாயிரம் ரூபாயைத் தவிர வேறு ஏதும் களவாடப்படவில்லை என்ற முடிவுக்குத்தான் அவர்களால் வர முடிந்தது.

அகிலாவின் விடாமுயற்சியைக் கண்டு சந்தானம் அசந்து போனான். அன்று மாலை சீமாச்சுவைச் சரமாரியாகக் கேள்விகளால் துளைத்தும் அவன் எதற்கும் மசியாமல் முதன் முதலாகக் கூறின பதிலையே சாதித்தான். போலீஸில் புகார் செய்வதாகப் பயமுறுத்தியும் அவன் தளரவில்லை.

''சீமாச்சு! இரும்புப் பெட்டியிலே எத்தனை ரூபாய் இருந்ததுன்னு யாருக்கும் தெரியாது. ஆனா ஏதோ இருந்திருக்கிறது என்று மட்டும் உயிலிலிருந்து தெரிகிறது. ராஜா அதை எடுத்திருக்கிறான் என்றும் எங்களால் ஊகிக்க முடிகிறது. நீ உனக்குத் தெரிந்ததைச் சொன்னால், உனக்குத்தான் நல்லது!'' என்றான் சந்தானம்.

''அதுதான் நான் சொன்னேனே, எனக்குத் தெரிந்ததையெல்லாம்....''

''போலீஸிலே எப்படிக் கேட்பார்கள் தெரியுமா? நகக் கண்ணிலே ஊசி ஏத்துவார்கள்! முழங்காலுக்குக் கீழே, வெளியே காயம் தெரியாமல் அடிப்பார்கள்......!'' என்றான் சந்தானம்.

''நீங்கள் என்னைப் பயமுறுத்துகிறீர்கள். எனக்கு ஒன்றும் தெரியாது.....''

''கோதண்டராமன் உசிரோடு இருந்த வரைக்கும் ராஜாவால் பணம் எடுத்திருக்க முடியாது.....!'' என்ற சந்தானம், ''அவர் செத்துப் போன பிறகும் அந்த அறைக்குள் யாருக்கும் தெரியாமல் நுழையச் சந்தர்ப்பம் இருந்திருக்க முடியாது. ஆகையால், அவன் அன்னிக்கு ராத்திரி வந்ததே இந்தப் பணத்தை எடுக்கத்தான்....'' என்று கூறி, வைத்த விழி எடுக்காமல் சீமாச்சுவைக் கூர்ந்து நோக்கினான்.

''அப்படியா.....? ரொம்ப நன்னாத் துப்பு துலக்குகிறீர்களே......'' சீமாச்சு சிரித்தான்.

''உனக்கு அதிலே என்ன பங்கு கிடைச்சுது.....''

''இருபது வருஷங்களா இந்த வீட்டிலே மாடுமாதிரி உழைச்சதற்குத் திருட்டுப் பட்டம்தான் மிச்சம்'' என்ற சீமாச்சு மெதுவாக நகர்ந்தான்.

திடீரென்று, ''அப்போ உன் டிரங்க் பெட்டியிலே ஏது நோட்டு நோட்டா பணம்.... யார் கொடுத்தார்கள்?'' என்று சந்தானம் கேட்டுப் பதிலுக்குக் காத்திருந்தான்.

சீமாச்சு திரும்பிப் பார்த்துச் சிரித்தான். ''எனக்கு டிரங்க் பெட்டியே கிடையாது, ஸார்!''

சந்தானத்தின் முகம் கறுத்தது. எதிர்பாராமல் ஒரு கேள்வியை உதிர்த்தால் சீமாச்சு திடுக்கிட்டுப் போய் உளறிவிடுவான் என்று எதிர்பார்த்த அவன் ஏமாந்துதான் போனான்.

''நெஞ்சை அறுத்தாலும் அவன் சொல்ல மாட்டான்!'' என்ற அகிலா, ''சீமாச்சு.... இன்னியிலிருந்து உனக்கு இங்கே வேலை இல்லை....'' என்றாள்.

''இந்தப் புண்ணியத்தை நீங்கள் கட்டிக் கொள்கிறீர்களா?.... ரொம்ப சந்தோஷம்.... தம்பி மாதிரி அவர், பெரியவர் என்னை வைச்சுக் காப்பாத்தினார்..... இப்போ நீங்கள் போகச் சொல்லுகிறீர்கள்.... என்ன செய்யறது...... தலைவிதி! போகிறேன்...''

அவன் தலை மறைந்ததும், ''அகிலா, பாவம் அவன் பேரிலே அநாவசியமா சந்தேகப்பட்டு, இப்போ வீட்டைவிட்டும் துரத்தி விட்டாய்!'' என்றான் ரவி.

''உனக்கு ஒண்ணும் தெரியாது, அண்ணா.... மனசிலே எப்போ இரக்கமும் பச்சாத்தாபமும் இருக்கணும்னு உனக்குச் சொல்லித் தந்தாலும் வராது'' என்றாள் அகிலா. **(தொடரும்)**

# முன்னேற்றத்துக்கோர் நிரந்தரமான...
# உறுதியான பாதை



**சோதனைகள் பல கண்ட நம்பகமான**
**சங்கர் பிராண்ட் சிமெண்ட்**
அமைத்திடும் முன்னேற்றத்துக்கான பாதைகள்
மிகக் குறைந்த பராமரிப்புச்செலவில்
நீடித்து நிற்கின்றன.

## இன்றே வாங்குங்கள் ... இன்றே கட்டுங்கள்
உங்களது வருங்காலத்தை




## இந்தியா சிமெண்ட்ஸ் லிமிடெட்
ரிஜிஸ்டர்ட் அலுவலகம்: "தன் பில்டிங்", மவுண்ட் ரோட், சென்னை-2.
தொழிற்சாலைகள்: சங்கர் நகர், திருநெல்வேலி மாவட்டம்.
சங்கரி (மேற்கு), சேலம் மாவட்டம்.

Criterion-ICT-1146

மாணவர்கள்

இந்தியன் ஏர்லைன்ஸ்

மூலமாக

பாதிக் கட்டணத்தில்

எச்சமயத்திலும்

எந்த இடத்திற்கும்

செல்ல முடியும்

விவரங்களுக்கு அருகிலுள்ள
இந்தியன் ஏர்லைன்ஸ் புக்கிங் ஆபீஸ் அல்லது
உங்கள் பிரயாண ஏஜண்டிடம் விசாரிக்கவும்.



இந்தியன் ஏர்லைன்ஸ்

IAC-305 TAM



# காலையில் பேசிய காரிகை

'ராஜ்'

காலை மணி ஏழு. டெலிபோன் மணி ஒலித்தது, ஒலித்துக் கொண்டே யிருந்தது. ஓசை நின்றது. ஒரு நிமிடத்துக்குப் பின் மறுபடியும் மணியின் ஒலி, நிசப்தம். இப்படி மாறி மாறி ஐந்து நிமிடங்கள். ஒரு தகவலும் இல்லை. டெலிபோன் செய்த யுவதிக்குக் கை ஓடவில்லை. என்னவாகி இருக்கும்? ஏன் பதிலே இல்லை? ஒரு நாளும் இப்படி இருந்ததே இல்லையே!

இன்னும் ஒரு முறை, மறுபடியும் மணியின் நாதம். அப்பாடா! யாரோ ரிஸீவரை எடுக்கும் சத்தம் கேட்டது.

''ஹலோ! எழுந்து விட்டீர்களா?'' என்று விசாரித்தாள் யுவதி.

பதில் உடனே கிடைக்கவில்லை. சிறு பொழுதுக்குப் பின், ''என்ன, எழுந்து விட்டீர்களாவா? யார் பேசறது?'' என்று குரல் வந்தது.

இவ்வளவு நாட்களாக இப்படி ஒரு பெண் குரலைக் கேட்கவே இல்லையே! அந்தக் குரலில் ஏன் இவ்வளவு கடுமை? அழகான ஆண் குரல், ''குட்மார்னிங், தாங்க்யூ'' (காலை வணக்கம், மிக்க வந்தனம்) என்று அல்லவா தினமும் மறுமொழி வரும்?

ஏதோ தவறு நேர்ந்துவிட்டது என்று எண்ணினாள் யுவதி. பரபரப்பில் தவறான எண்களைச் சுழற்றித் தப்பாகக் கருவியை இயக்கி விட்டோமோ என்று எண்ணித் தொடர்பைத் துண்டித்து விட்டாள். சிறிது நேரம் கழித்து மீண்டும் 'டயல்' செய்தாள். அதே பெண் குரல் மறுமுனையில் ''ஹலோ!'' என்று சொல்லிற்று.

''அது ............ தானே?'' என்றாள்.

''ஆமாம்! என்ன விஷயம்?''

''ஒண்ணுமில்லை.......''

''ஒண்ணுமில்லைன்னு டெலிபோன் செய்வானேன் ?''

''அவர் இருக்கிறாரா?''

''அவராவது எவர்? அவரைத் தெரியுமா உனக்கு ?''

''ஏன் தெரியாமல்? ஒரு மாசமாகத்தான் அவருடன் பொழுது விடிந்தவுடன் பேசிக் கொண்டிருக்கிறேனே. இன்று ஏன் அவர் பேசவில்லை ?''

''அப்படியா? ஒரு மாசமாப் பேசிண்டிருக்கையா? உன் பெயர் என்னம்மா ?''

''கிரிஜா!''

''கிரிஜா! இன்று மாலை வாம்மா, அவரைப் பார்க்கலாம்!'' என்றாள் மறுபக்கத்து மங்கை.

''கட்டாயம் வருகிறேன். ஆனால் நீங்கள் யாரு பேசறது ?'' பதில் இல்லை.

'ரகுராமன் பெயரளவில் ராமன், செய்கையில் கிருஷ்ணனைப் போல்தானோ? 'கசி! கசி!' என்று சுத்திக் கொண்டிருக்கிறவர், இப்படியும் மனம் மாறுவாரோ? சாயங்காலம் அவளை வைத்துக் கொண்டே அவர் 'குட்டை உடைக்கிறேன்' என்று கறுவிக் கொண்டாள் கிரிஜாவுடன் பேசிய கசி.

மாலை வந்தது. கிரிஜாவும் வந்தாள். ''என்ன அழகு?'' என்று வியக்காமல் இருக்க முடியவில்லை கசியால்.

''கிரிஜாவா ? உட்கார். அவர் வரும் நேரம்தான்!'' என்று வரவேற்றாள்.

வெளியில் கார் வரும் சத்தம் கேட்டது. காரிலிருந்து இறங்கி உள்ளே வந்தவர் மேல் நாட்டுப் பாணியில் உடை அணிந்து ஒரு பெரிய மனிதக் களையுடன் காணப்பட்டார். ''கசி!'' என்று ஏதோ பேச்சைத் தொடங்கியவாறு நுழைந்தவர் கிரிஜாவைக் கண்டதும் சிறிது தயங்கி நின்றார். அவரைக் கண்ட கிரிஜா எழுந்து நின்று, ''வணக்கம்'' என்று கரம் குவித்து நின்றாள். மறு வணக்கம் தெரிவித்துவிட்டு, ''இது யார் கசி! உனக்கு இப்படி ஒரு ஸ்நேகிதி இருப்பதாக எனக்குச் சொன்னதில்லையே !'' என்றார்.

'என்ன போக்கிரித்தனம்!' என்று சபித்தது கசியின் மனம். ''என்னை ஏன் கேட்கிறீர்கள் ?'' என்றாள் கணவனிடம்.

''நீ யாரம்மா, தெரியவில்லையே?'' என்று கிரிஜாவையே கேட்டார் ராமன்.

''நான் யாரா? ஒரு மாதமாகப் பொழுது விடிந்ததும் முதல் காரியமாக என்னுடன்

பேசி இருக்கிறீர்களே! அப்படிப் பேசப்பட்டவன்தான் நான்!'' என்று குறும்பாக நகைத்தாள் கிரிஜா.

''என்னம்மா, இது? ஏதோ சொல்லறே? எனக்கு ஒண்ணும் புரியல்லியே!''

''என்ன சார், ஒவ்வொரு நாள் காலையிலும் ஆறு மணி 'டாண்' என்று அடித்ததும் 'குட்மார்னிங், தாங்க்யூ' என்று இனிமையாகக் கூறுவீர்களே ஞாபகமில்லையா?''

''அடடே! அந்தப் பெண்ணு நீ? உன்னைப் பார்த்ததிலே ரொம்ப சந்தோஷம். கரெக்டா டியூட்டியைச் செஞ்சிண்டிருந்தே'' என்றவர் சுசியைப் பார்த்துச் சிரித்தார்.

அவளுக்கு ஒன்றும் புரியவில்லை. அவர்கள் இருவருமோ நமட்டுச் சிரிப்புச் சிரிக்கிறார்கள். ''என்னன்னு விஷயம்?'' என்று கடைசியில் அழமாட்டாமல் கேட்டாள் சுசி.

ரகுராமன் ஆரம்பித்தார்:

''சுசி! நீ ஒரு மாதமா என்னைத் தனியாக விட்டுட்டு ஊருக்குப் போயிட்டியா?''

''அது எவ்வளவு தவறுங்கிறது இப்போ தெரியறது.''

''என்ன உளறல் சுசி?''

''நான் உளறல்லே. இதோ, அந்தப் பெண்ணை மென்னு முழுங்குகிறதே!''

''மாமி! நான் குற்றம் பண்ணிட்டு மென்னு முழுங்கலே. வாசனைப் பாக்கைத்தான் வாயிலே போட்டிண்டிருக்கேன்'' என்று வாயைத் திறந்து காட்டினாள் கிரிஜா.

''ரொம்ப சரி! நீ நன்னு பாக்கை விழுங்கிட்டு மாமிக்கு விளக்கமா நம்ம ஏற்பாட்டைப் பற்றிச் சொல்லிவிடு'' என்று கூறிக்கொண்டு ஹாய்யாக ஒரு நாற்காலியில் சாய்ந்தார் ரகுராமன்.

''சுசி மாமி, தயவுசெய்து நிதானமாக் கேளுங்கள். நான் டெலிபோன் இலாகாவிலே வேலை செய்கிறவள். எங்கள் ஸ்தாபனம் பொதுமக்களுக்குச் சில சௌகரியங்கள் செய்திருக்கிறது. அதில் தூங்குபவர்களைக் காலையில் வேணும்போது எழுப்பி விடுவது ஒன்று. உங்கள் கணவர் தினம் காலை ஆறு மணிக்கு டெலிபோன் மூலம் தன்னை எழுப்பி விடும்படி எங்கள் இலாகாவுடன் ஏற்பாடு செய்திருந்தார். அந்த வேலையைத்தான் நான் ஒரு மாதமாகச் செய்து வந்தேன். கூப்பிடும் போது இன்சொல்லுடன் மரியாதையுடன் பேசி வந்தார். அவரைக் காண வேண்டும் என்பது என் எண்ணம். இன்று அது பலித்தது. நான் போய் வருகிறேன்'' என்று புறப்பட்டாள் கிரிஜா.

''சரியாய்ப் போச்சு போ! இதை நீ டெலிபோனிலேயே என்னிடம்சொல்லியிருக்கலாம். நன்னு விளையாடினாய். போனது போகட்டும். இருந்து காப்பி டிபன் சாப்பிட்டு விட்டுப்போ. தவிரவும் இப்போ நீ எனக்கு ஓர் உபகாரம் செய்யணும். இனிமேல் தினமும் நீ என்னைக் காலையில் எழுப்பு'' என்றாள் சந்தேகம் தீர்ந்த சுசி.

---

எந்த ஆபரேஷன் கடினமானது என்பதுபற்றி மூன்று நாட்டு ஸர்ஜன்கள் சர்ச்சை செய்து கொண்டிருந்தார்கள்.

''இருதய ஆபரேஷன்தான் கடினம்'' என்றார் பிரிட்டிஷ்காரர்.

''மூளை ஆபரேஷன்தான் கடினம்'' என்றார் அமெரிக்கர்.

''உள்நாக்கு ஆபரேஷன்தானே கடினம்'' என்றார் ருஷ்யர்.

சாமானிய டான்ஸில்ஸ் ஆபரேஷனை அவர் பெரிதாகச் சொல்லியதில் மற்றவர்கள் ஆச்சரியப்பட்டபோது ருஷியர் பின்வருமாறு விளக்கம் தந்தார்:

''ருஷ்யாவில் எவருமே வாய் திறக்கக் கூடாது. எனவே, காது துவாரத்தின் வழியாகத்தான் தொண்டை ஆபரேஷனைச் செய்ய வேண்டியிருக்கிறது.''



தகவல்: ''ரமன்'' ஆதாரம்: 'ம டேபிள் காவிப்''

---

☐ 'அடுத்த போரில் தப்பிப் பிழைப்பவர்கள் இறந்தவர்களைக் கண்டு பொறாமைப்படுவர்.' —கென்னடி தம் சொற்பொழிவுகளில் இதை மேற்கோள் காட்டிப் பேசுவது உண்டு.—இந்தச் சொற்றொடருக்கு மூல ஆசிரியர் யார் தெரியுமா?

☐ அந்நிய நாட்டுப் படையால் தன் நாட்டுக் கோட்டை யொன்று தாக்கப்படுவதை நேரில் கண்ட ஒருவர் பாட்டுப் பாடினார். அதுவே அந்நாட்டின் தேசிய கீதமாக அமைந்தது. பாடியவர் யார்? நாடு எது என்று தெரிகிறதா?



**விடை:** (1) வேறு யாருமில்லை; ருஷியப் பிரதமரா யிருந்த க்ருஷேவ்.

(2) 1814ல் அமெரிக்காவின் மேரிலாந்து மாநிலத்தில் பால்டிமோர் நகரில் உள்ள மெக் ஹென்ரிகோட்டையைப் பிரிட்டிஷ் கப்பற் படை தாக்கியதை நேரில் கண்ட ஃப்ரான்ஸிஸ் கீ என்னும் அமெரிக்க வழக்கறிஞர் தேசபக்தி மேலிட உணர்ச்சிப் பெருக்கில் ஒரு கவிதை பாடினார். 'ஸ்டார்—ஸ்பாங்கில்டு பேனர்' என்று தொடங்கும் அப்பாடலே பின்னர் அமெரிக்காவின் தேசிய கீதமாயிற்று.

- இரா. பாலாஜி

தரத்துக்கும், சிக்கனத்துக்கும்
கவர்ச்சிக்கும் எப்பொழுதும்

## 'ஏரோபிளே' மார்க்

# பிளேவுட்டை

பயன்படுத்துங்கள்

பலவிதமான மாதிரிகளில்

**பிளாக் போர்டுகளாகவும்**
**பிளஷ் கதவுகளாகவும்**
கிடைக்கின்றன

தயாரிப்பவர்கள்

## உட்கிராப்ட்ஸ் அஸ்ஸாம்

புரொப்ரைட்டர்ஸ் :

**ஜெய்ஸ்ரீ டீ & இண்டஸ்ட்ரீஸ் லிட்.**
**இந்தியா எக்சேன்ஜ், கல்கத்தா-1**

**கல்கத்தா ஆபீஸ் :** இந்தியா எக்சேன்ஜ் பில்டிங், இரண்டாவது மாடி, கல்கத்தா-1 டெலிபோன் : 22-4520, தந்தி : ஏரோபிளே

**பம்பாய் ஏஜெண்டுகள் :** மெஸர்ஸ் தயாலால் மக்கன்ஜி ஜாவேரி, கிரேட் சோஷல் பில்டிங், 60, ஸர் பி. எம். ரோடு, பம்பாய்-1 டெலிபோன் : 26-5051, 26-6394, தந்தி : ஜெவ்ருபேர்.

**டில்லி ஆபீஸ் :** 7531/3, டெலிபில தெரு, ராம்நகர், புது டில்லி; டெலிபோன்: 26-1927, தந்தி : ஜெம்மகார்டு.

**சென்னை ஏஜெண்டுகள் :** மெஸர்ஸ் வி. நாதமுனி செட்டி & கம்பெனி, 11, காசி செட்டி லேன், சென்னை-1. டெலிபோன் : 34093, தந்தி : மகோரா.

**அகமதாபாத் ஏஜெண்டுகள் :** மெஸர்ஸ் மோகன்லால் குலாப்சந்த் ஷா, காலுபூர் ரோடு, தங்கசால் அருகில், அகமதாபாத். டெலிபோன் : 53394, தந்தி : கர்சிப.

ASP/WA-1/67A

---

## பலத்திற்கும்
## ஆரோக்கியத்திற்கும்

பண்டிட் D. கோபாலாசார்லுவின்

# ஜீவாம்ருதம்

**69 வருடங்களாக**
**பிரசித்திப்பெற்றது**

## ஆயுர்வேதாஸ்ரமம்

பிரைவேட் லிமிடெட்
சென்னை-17.

---




# PHOTO - CINE - X-RAY

We are happy to announce the addition of 'INDU' X-RAY Film to our range of Quality Photographic Products.

Our factory has been on stream for some time now and we are confident of providing every discriminating customer his requirements of Photo, Cine & X-Ray Films.

## HINDUSTAN
## PHOTO FILMS MFG. CO. LTD.

( A Government of India Enterprise )

INDU NAGAR, OOTACAMUND

FDS/HPF/TY

# தமிழிசை — சில நினைவுகள்

○ தமிழிசைச்
சங்கத்தின்
வெள்ளி விழா
ஆண்டு இது

## இசையும் இசைக் கருவிகளும்

சிலப்பதிகாரம் என்னும் முத்தமிழ்க் காப்பியத்தில் ஆடல் ஆசிரியன், இசையாசிரியன், இசைப் பாட்டு இயற்றுவோன், தண்ணுமை குழல் யாழ் வாசிப்போர் ஆகியவர்கள் இயல்புகளும் யாழ், புல்லாங்குழல் முதலிய இசைக் கருவிகளை அமைக்கும் முறைகளும் விரிவாகக் கூறப்பட்டிருக்கின்றன. இவற்றை யெல்லாம் உள்ளவாறே தொகுத்துத் தனி நூலாக வெளியிட்டால் பழைய இசை மரபுகளை அறியலாம். தேவாரம், திவ்யப் பிரபந்தம், திருவிசைப்பா முதலான அருட் பாடல்களெல்லாம் நம் நாட்டுப் பண் முறையில் அமைந்தவையேயாகும்.

குழல், யாழ் என்னும் இசைக் கருவிகள் இரண்டும் நம் நாட்டு மக்கள் கண்டறிந்த இசைக் கருவிகள் ஆகும். வெளிநாட்டிலிருந்து இங்கு வரப் பெற்ற இசைக் கருவிகளல்ல. இவ்விரண்டு கருவிகளும் கண்டுபிடிக்கப்பட்ட உண்மை வரலாற்றைக் கேட்டால் நம்மில் பலருக்கு அது வியப்பாக இருக்கும். காட்டில் மாடு மேய்த்துக் கொண்டிருந்த • ஆயர் குலச் சிறுவர்கள் ஒரு புதிய ஒலி காற்றில் மிதந்து வந்து தம் காதுகளில் விழுவதைக் கேட்டனர். இப்புதிய ஒலி எங்கிருந்து வருகின்றது எனத் தேடிய போது மலைச் சாரலில் முளைத்தெழுந்த மூங்கிலில் வண்டு துளைத்த துளையின் வழியே மேல் காற்றுப் புகுந்து வெளி வருவதால் உண்டாகியது என்று தெளிந்தனர். அதன்பின் அவ்வாறே தாமும் இசையெழுப்பக் கருதிச் சிறு மூங்கிலை ஓரளவாக வெட்டியெடுத்துத் தீக்கடைக் கோலால் நெருப்புண்டாக்கித் துளையிட்டு வாயில் வைத்து ஊதி மகிழ்ந்தார்கள். அப்புல்லாங்குழலை ஊதி ஊதிச் சலிப்படைந்த அச்சிறுவர்கள் அக்காட்டிலுள்ள குமிழங் கொம்பை முறித்து அதனை வில்லைப் போல் வளைத்து மரல் என்னும் புல்லை அவ்வளைத்த கோலின் இரு நுனியிலும் இழுத்துக் கட்டி விரலால் தெறித்து அதில் இனிய நாதம் தோன்றுதலைக் கேட்டு மகிழ்ந்தனர். இது வில் யாழ் எனப் பெயர் பெற்றது. இச்செய்திகளைப் பெரும் பாணாற்றுப் படை, அகநானூறு முதலிய நூல்களால் அறிகிறோம்.

தண்டபாணி தேசிகர்
—'தமிழ் இசைக் கட்டுரைகள்'

## பாவ சங்கீதம்

டி. கே. சி. தமிழ் நாட்டுச் சங்கீதத்தையோ அல்லது பதங்களையோ பற்றிப் பேசினால் கேட்டுக் கொண்டேயிருக்கலாம். 'அது தெய்வகானம் ஐயா; தெய்வ கானம்! தமிழர் சங்கீதம் பாவத்திற்குரியது. உணர்ச்சியோடு இதயத்தில் பாயக் கூடியது' என்ற பிடிகையோடு பதங்களைப் பற்றிப் பேச ஆரம்பிப்பார். 'தமிழ்ப் பதங்கள் ஆயிரக் கணக்கானவை தமிழ் நாட்டில் உண்டு. பதங்களை நேரில் பாடக் கேட்டு பாவங்களை அநுபவிப்பதே முக்கியம். அநுபவிக்க அநுபவிக்க பாவம் இதயத்தில் ஏறி நிற்கும். உணர்ச்சி ஒன்றை மாத்திரம் விடாது கொள்வோமேயானால் பாவ சங்கீதமாகவே பாடவும் வரும். பதங்களில் ராகங்களின் மூர்ச்சைகளைத் தெளிவாய்த் தெரியக் காணலாம்' என்று முடிப்பார்.

தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான்
''ரஸிகமணி டி. கே. சி.''

○

தில்லைப் பதியுடையான்
சிற்றம்பலந் தன்னில்
அல்லும் பகலும் நின்(று)
ஆடுகின்றான் — எல்லைக் கண்
அண்ணாமலை மன்
அமைத்த கலைக்கழகம்
கண்ணாரக் கண்டு
களித்து

- தேசிகவிநாயகம்பிள்ளை
(ராஜா ஸர் அண்ணாமலை செட்டியார் அறுபதாண்டு நிறைவு விழாவின்போது)

○

தமிழிசையினால் கர்நாடக சங்கீதத்தின் பெருமை குன்றி விடாது. உயர்ந்த சங்கீதமும் உயர்ந்த சங்கீதத்தை அநுபவிக்கும் ரஸிகத் தன்மையும் தமிழிசை இயக்கத்தினால் தமிழ் மக்களிடையே மேலும் மேலும் பரவும். இதனால் கர்நாடக சங்கீதமும் மேன்மை அடையும்.

— கர்நாடகம்
''ஆடல் பாடல்''
*10–1–1943*

○

தமிழிசை இயக்கத்தின் பெருமை, பொறுப்பு அனைத்தையும் ராஜா ஸர் அண்ணாமலை செட்டியாரின் தலையிலேயே சுமத்தி விடுவதென்று சிலர் சதியாலோசனை செய்திருப்பதாய்த் தோன்றுகிறது. உண்மையில் தமிழ் மக்களின் ஏகோபித்த உள்ள உணர்ச்சிதான் அந்த இயக்கத்துக்குக் காரணமாகும். அந்த உணர்ச்சியின் முக்கிய பிரதிநிதிகளில் ஒருவராக இருப்பதினாலேயே ராஜா ஸர் அவர்கள் இன்று தமிழ் மக்களின் அபிமானத்துக்குப் பாத்திரமாகியிருக்கிறார். இதற்கு முன்னால் எத்தனையோ லட்சக்கணக்கில் செய்த தர்மங்களைக் காட்டிலும், தமிழிசை இயக்கத்துக்கு அவர் அளித்த சில ஆயிரம் ரூபாய் நன்கொடை தமிழர்களின் உள்ளத்தை அதிகம் கவர்ந்துவிட்டது வெளிப்படை.

''கல்கி''
*10–1–1943*



# பட்டமளிப்பு

கோமதி ஸ்வாமிநாதன்

(எழுத்தாளர் பஞ்சாமிர்தத்தின் வீட்டுக் கூடம். பஞ்சாமிர்தத்தின் பையன் ராஜு ஓரமாக இருந்த நாற்காலியில் அமர்ந்து பத்திரிகை படித்துக் கொண்டிருக்கிறான். பஞ்சாமிர்தம் ஒரு பாட்டைப் பாடிக் கொண்டே வாசற் பக்கத்திலிருந்து உள்ளே வருகிறார்.)

பஞ்சாமிர்தம் (பாடுகிறார்): சரச சாம தான பேத தண்ட சதுர (நிறுத்தி) ஏண்டா ராஜு! அப்புறம் என்னடா!

ராஜு: சாம, தான, பேத, தண்டங்கற நாலு ஐயிட்டமுமே பலிக்கலேன்னு பேசாம சரண்டர் — க்ளீன் சரணாகதிதான்! ஒரு வேளை முடிஞ்சால் யுனைடெட் ஃப்ரண்ட் அமைக்க முயற்சி செய்யலாம்.

பஞ்சாமிர்தம்: போடா இடியட்! பாலிடிக்ஸ் பேச வந்து விட்டான்! நான் இப்போ சங்கீதத்திலே திளைச்சுண்டு இருக்கேன்.

ராஜு: ஓஹோஹோ! ஆனால் சங்கீதம் உங்ககிட்டே ரொம்ப இளைச்சாப்போல இருக்கே! ஒரு முழுக் கீர்த்தனையிலே முதல் ஐந்தாறு வார்த்தைகளுக்கே தடுமாறுகிறதே!

பஞ்சாமிர்தம்: சரிதாண்டா மகா மேதாவி! எனக்கு அவ்வளவு போதும். இந்தப் பாட்டு என்ன ராகம்?

ராஜு: காப்பி நாராயணி.

பஞ்சாமிர்தம்: ஐ ஸீ! பூரி கல்யாணி மாதிரி காப்பி நாராயணியா?

[பஞ்சாமிர்தத்தின் மனைவி பெரிய நாயகி வருகிறாள்.]

பெரியநாயகி (வந்துகொண்டே:) எந்த நாராயணனுக்கு இப்போ பூரியும் காப்பியும் கொட்டி உபசரிக்கணும்? உங்களுக்கும் வேலையில்லே! உங்கள் சிநேகிதக் கும்பலுக்கும் வேலையில்லே! விலைவாசி இருக்கிற நிலையிலே யாரையும் அழைத்துக் கொண்டு வந்து நிறுத்தி என் கழுத்தை அறுக்காதேயுங்கோ!

பஞ்சாமிர்தம்: நீ கடைசியாகக் குறிப்பிட்ட வேலையை இப்போ நீயே செய்து கொண்டிருக்கே! நான் சங்கீத விஷயமாய்ச் சர்ச்சை பண்ணிண்டு இருக்கேன்! நீ அதிலே சாப்பாட்டையும் டிபனையும் கலந்து அமர்க்களம் பண்ணறே!... நீ உன் காது விஷயமாக ஒரு டாக்டரைச் சீக்கிரம் பார்க்கிறது நல்லது!

பெரியநாயகி: எங்க குடும்பத்தாருக்கே கொஞ்சம் காது மந்தம் தான். அதனாலேதான் அந்தக் காலத்திலேயே உங்களை மாப்பிள்ளையாகத் தேர்ந்தெடுக்கத் தயாரான போது பல விஷயங்களைக் காதில் போட்டுக் கொள்ளாமல் விட்டுட்டா!

பஞ்சாமிர்தம்: ரைட்! ரைட்! நீ ஏதோ சரித்திர ஆராய்ச்சியிலே ஈடுபட்டுப் பெரிய கருத்தரங்குகளிலே பேப்பர் வாசிக்கிற மாதிரி ஆரம்பிச்சுட்டே! உன் கருத்தரங்கை வேறே இடத்திலே வைத்துக்கொள். இந்த இடத்திலே நான் சங்கீத ஆராய்ச்சி பண்ணிண்டிருக்கேன். ஏண்டா ராஜு! பூரி கல்யாணின்னு கல்யாணிக்கு முன்னாலே ஒரு பூரியைப் போடறா? நட பைரவின்னு பைரவிக்கு முன்னாலே ஒரு பதத்தைச் சேர்க்கறா! கல்யாணியும் பைரவியும் இந்தச் சேர்க்கையினாலே எப்படிப் பாதிக்கப்படுகின்றன?

பெரியநாயகி: மனசு பூரிச்சு இருக்கிற போது கல்யாணி ராகம் பாடினால் பூரி கல்யாணி. நடந்துண்டே பைரவி ஆலாபனம் செய்தால் நட பைரவி! இது தெரியாதா?

பஞ்சாமிர்தம்: உனக்கு ரொம்ப விஷயம் தெரியும் போலிருக்கு! இப்போ காது விஷயமாக என்னை மட்டம் தட்டிப் பேசினதிலே உன் மனசு ரொம்பப் பூரிச்சுப் போயிருக்கும்! அந்தச் குட்டிலே கொஞ்சம் கல்யாணி பாடேன்!

[பெரியநாயகி முகவாய்க் கட்டையைத் தோளில் இடித்துக்கொண்டு போகிறுள்]

ராஜு: என்னப்பா! அது பூரி கல்யாணியுமில்லே மிழங்கு கல்யாணியுமில்லே! பூர்வி கல்யாணி. அது தனி ராகம். உங்களுக்கு எதற்கு இந்த விவகாரங்களெல்லாம்! ஏதாவது சங்கீத் விஷயங்களை உங்கள் சிறுகதையிலே புகுத்துவதாகத் திட்டமா? அப்படியானல் யாராவது வித்வான் கிட்டே போய்ச் சந்தேகங்களைப் போக்கிக் கொண்டு உஷாராக எழுதுங்கள்.

ராஜு: அப்படி என்ன. ரகசியம்? மார்கழி மாச பஜனைக் கோஷ்டியோட காலம்பற எழுந்து பாடக் கிளம்பப் போகிறீர்களா?

பஞ்சாமிர்தம்: மண்டூகம்! உன்னுலே இந்த விஷயத்தைக் கற்பனையே பண்ண முடியாதுடா!... டேய்! நம்ப பேட்டையிலே இருக்கே சர்வஜன ரஞ்சக சங்கீத சபா அந்தச் சபா எனக்கு 'சங்கீத பஞ்சரத்தினம்' என்கிற விருதை வழங்கிக் கௌரவிக்கப் போகிறது. அநேகமா இந்த மாதக் கடைசிக்குள் இந்த விருது வழங்கும் விழா நடக்கலாம்!



ராஜு (இடுக்கிட்டு): என்ன? என்ன? உங்களுக்குச் சங்கீத விருது கொடுக்கப் போகிருர்களா? அதிசயமான விஷயமா இருக்கே?

பஞ்சாமிர்தம்: அக்கிரமமான விஷயமாக இருக்கேன்னு சொல்ல நினைத்தாய். அப்புறம் நாசூக்காக அதிசயம்கற வார்த்தையைப் போட்டுச் சமாளித்தாய்! எனக்குத் தெரியும்டா! நீ நினைக்கிறப்போலே நான் ஒன்றும் சங்கீத விஷயத்திலே ஔரங்கசீப் இல்லே!

ராஜு: அதற்காக நீங்கள் ஒரு 'தான்சேன்' என்றும் சொல்லிக் கொள்ள முடியாதே! எனக்கென்னவோ இது நம்ப முடியாத விஷயமாகத்தான் இருக்கு.

பஞ்சாமிர்தம்: இல்லாதபோனல்?...

ராஜு: உங்கள் விஷய ஞானக் குறைவைப் பற்றி நாலுபேர் ஆசிரியருக்குக் கடிதப் பகுதியில் எழுதித் தொலேப்பா.

பஞ்சாமிர்தம்: இடியட்! நான் நாலு பேர் சந்தேகத்தைப் போக்கி டியூஷன் ஃபீஸ் வாங்கும் நிலேயிலே இருக்கேன்!... அதாவது அந்த நிலேயிலே வைக்கப் பட்டிருக்கேன்னேன்!...

ராஜு: விஷயத்தைத் தெளிவாகச் சொல்லுங்களேன்!... உங்கள் அபிமான ஜேம்ஸ் ஜாய்சையும் ஃபால்க்னரையும் விட்டுட்டு ஏன் திடீர்னு தியாகராஜர், தீட்சிதர் இவர்களோட பிராணனே வாங்க நினைக்கிறீர்கள்?

பஞ்சாமிர்தம்: அதுதான்டா விஷயம்! (சுற்று முற்றும் பார்த்து விட்டுத் தணிந்த குரலில்) ஒரு ரகசியம் சொல்லி வைக்கிறேன். அவசரக் குடுக்கை மாதிரி உங்க அம்மா கிட்டே போய் இப்பவே உளறி வைக்காதே! மெதுவாகச் சொல்லலாம்.

பஞ்சாமிர்தம்: நானே முதலில் நம்பலே! ஆனல் என் சிநேகிதர் விநாயகம் அழுத்தம் திருத்தமாகச் சொன்ன பிறகுதான் நம்பினேன். சபாக் காரியதரிசி கஸ்தூரி ரங்கன் இல்லே! அவர் பஸ் ஸ்டாண்டிலே சந்தேகத்துக்கு இடமில்லாமே பேசிண்டிருந்ததை இந்த விநாயகம் பக்கத்திலிருந்து கேட்டிருக்கிருர்.

ராஜு: சங்கீதத் துறைக்கு நீங்க அப்படி ஒன்றும் சேவை பண்ணியிருப்பதாக எனக்குத் தெரியலே... கஸ்தூரி ரங்கனுக்கு...

பஞ்சாமிர்தம் (கோபத்துடன்): பெரிய மேதாவி மாதிரி பேச வந்துட்டான்! சேவைகளை அளந்துதான் பட்டங்கள் கொடுக்கிருர்களோ? கஸ்தூரி ரங்கனுக்கு நம்ப பேட்டைவாசிகளிலே பிரபலமான ஒருவரைக் கௌரவிக்கணும்னு தோணியிருக்கும். என்னைத் தேர்ந்தெடுத்திருக்கிருர். சங்கீத சபாக்காரா, சங்கீதம் சம்பந்தப்பட்ட விருதைத் தானே வழங்க முடியும்? 'எழுத்தின் செல்வன்' என்று அவர்கள் கொடுக்க முடியாதே!

தானாக வரும் கௌரவத்தை விட்டுவிட முடியுமா? அப்படி எவன் விடறான் இந்தக் காலத்திலே!

ராஜு: பேஷ்! பேஷ்!, சங்கீத பஞ்சரத்தின பஞ்சாமிர்தம் என்று சொன்னால் கேட்பதற்கு இனிமையாகத்தான் இருக்கு!

பஞ்சாமிர்தம்: இன்னொரு தடவை சொல்லு, கேட்போம்.

ராஜு: ஒரு சின்ன டேஞ்சர்! வடக்கத்திக் காரர்கள் காதில் கொஞ்சம் மாறுதலாகப் பஞ்சரத்தின பஞ்சாமில்லாகான் என்று விழுந்தால், அவர்கள் உடனே உங்களை, பிஸ்மில்லா கானின் பெரியப்பா பிள்ளை என்று நினைக்கலாம்!

பஞ்சாமிர்தம்: போடா இடியட்! நீயே என் கையிலே ஒரு ஷெனாயைத் தூக்கிக் கொடுத்து ஊது என்பாய் போலிருக்கே?

ராஜு: இந்த ஆனந்தத்திலே உங்க உடம்பு இன்னும் கொஞ்சம் ஊதாமல் இருந்தால் சரி! கஸ்தூரிரங்கன் உங்ககிட்டே நேராகச் சொல்லிட்டாரா?

பஞ்சாமிர்தம்: இன்னும் இல்லே. விழாவுக்குத் தலைமை தாங்க ஜனாதிபதியைக் கூப்பிடுவதா, உதவி ஜனாதிபதியைக் கூப்பிடுவதான்னு முடிவு செய்யலியாம். இதையெல்லாம் 'செட்டில்' பண்ணிவிட்டு என்னிடம் வருவார்.

ராஜு: நிச்சயமா உங்களுக்குத்தானா விருது?

பஞ்சாமிர்தம்: அசடு! இன்னும் என்னடா சந்தேகம்? நம்ப விநாயகம் காதில்தான் தெளிவாக எல்லாம் விழுந்திருக்கே? கஸ்தூரி ரங்கன் தன் சிநேகிதர்கிட்டே என் அங்க அடையாளங்களை யெல்லாம் சொல்லிக்கூட வருணிச்சிருக்கார்! என்னைவிட விநாயகத்துக்கு ரொம்ப சந்தோஷம். விழாவன்று நான் விருது பெற்றவுடன் இரண்டடி சுற்றளவிலே பிரும்மாண்டமான ரோஜாப்பூ மாலையை அவர் கையாலே எனக்குப் போட்டுப் பார்க்கணும்னு ஆசைப்பட்டார். அவர் பெரிய குடும்பஸ்தர். நமக்காக அவர் சிரமப்படக் கூடாது பாரு! இருபது ரூபாயைத் தூக்கிக் கொடுத்துப் பூக்கடைக்காரன் கிட்டே உடனே அட்வான்ஸ் கொடுக்கச் சொல்லி விட்டேன்.

ராஜு: இரண்டடி உயர ரோஜாப்பூ மாலை விடிய விடிய ஒரு ரூபாய் இருக்கும்!

பஞ்சாமிர்தம்: தற்குறி! இது என்ன பஜனைமட மாலையா? ஆறடி உயரம்! சுற்றளவு இரண்டடி! அதாவது சர்க்கம்பரன்ஸ்...

ராஜு: புரியறது! பட்டத்தை மாட்டிக்கறதுக்கு முன்னாலே மாலையை மாட்டிக்க நீங்களே ஏற்பாடு பண்ணிக் கொண்டாயிற்று!

பஞ்சாமிர்தம்: கரெக்ட்! விழாவன்று எப்படியும் நாலு வார்த்தை பேசச் சொல்லுவா! அந்தப் பேச்சிலே சங்கீத மணம் அப்படியே கமழணும். 'அடேயப்பா மகா ஞானஸ்தன்'னு கேட்கிறவா நினைச்சுக்கணும்!

ராஜு: சங்கீதத் துறையிலிருந்து நாடகத் துறைக்குத் தாவுகிறீர்களே!

பஞ்சாமிர்தம்: எந்தத் துறையிலே திறமைசாலியாக இருந்தாலும் கடைசியிலே ஓரளவாவது நாடகமாடத் தெரியலேன்னா இந்தக் காலத்திலே முன்னுக்கு வர முடியாதுடா! அப்படியாயிடுத்து.

ராஜு: 'சங்கீத ஞானமு பக்திவினா' என்கிற கீர்த்தனையை எப்பவாவது கேட்டிருக்கிறீர்களா? அர்த்தம் தெரியுமா?

பஞ்சாமிர்தம்: ஏண்டா! நீ இப்போ எனக்கு நடிக்கச் சொல்லித் தரப் போறியா? போடா அதிகப் பிரசங்கி! எனக்குத் தெரியும் எப்படி எந்தச் சந்தர்ப்பத்தைச் சமாளிக்கிறதுன்னு. இந்தச் சங்கீத பஞ்சரத்தின பஞ்சாமிர்தத்தைச் சும்மா சாதாரணமாக நினைச்சுப்பிடாதே!

ராஜு: இன்னும் கான்வொகேஷன் ஆகலேன்னேன்! அதற்குள் பட்டத்தை ஆணி அடிச்சு மாட்டிக்கிறீர்கள்.

[பெரியநாயகி வருகிறாள்]

பெரியநாயகி: அப்பாவுக்கும் பிள்ளைக்கும் போது போகலேன்னு சுவரிலே ஆணியடிச்சுக் காலண்டர்களையும், படங்களையும் மாட்டுவீர்கள். அத்தனைக்கத்தனை மூட்டைப் பூச்சி அடைகிறது!

பஞ்சாமிர்தம்: மூட்டைப் பூச்சியைத் தனியாக வேறு தேடிக் கொண்டு போகணுமா? அதுதான் நீ இருக்கியே...!

ராஜு: அம்மா! அப்பா இப்போ ரொம்ப 'ஸீரியஸ் மூட்'லே இருக்கார்! அதாவது சங்கீத ஞானத்திலே மூழ்கி யிருக்கிறார். அவருக்கு...

பஞ்சாமிர்தம்: உஷ்! சும்மா இருடா! உளறி வைக்காதே!

பெரிய நாயகி: என்னடா எனக்குத் தெரியக்கூடாத விஷயம்? உளறுதேங்கறார்.

ராஜு: அவருக்குப் பாட்டுச் சொல்லிக் கொடுத்துக் கொண்டிருக்கிறேன். அப்பா! இந்த மாதிரிக் கட்டங்களிலே அம்மாவைப் பார்த்து என்ன பாட்டுப் பாடணும் தெரியுமா?

பஞ்சாமிர்தம் (திடுக்கிட்டு): என்னடா பாட்டு?

ராஜு: இதுதான்!... மஞ்சள் முகமே வருக! மங்கல விளக்கே வருக! கொஞ்சும் தமிழே வருக! கொஞ்சம் பேசாமல் அமர்க!

பெரியநாயகி (போய்க்கொண்டே): நன்னா இருக்கு! அப்பாவுக்குப் பிள்ளை புத்தி சொல்ற காலமாப் போச்சு! (போகிறாள்)

பஞ்சாமிர்தம்: கெட்டிக்காரன்! சமாளிச்சுட்டியே! இந்தச் சாதுர்யத்தைப் பற்றிக் கூட என் பிரசங்கத்திலே இரண்டு வார்த்தை.

ராஜு: வேண்டாம்! வேண்டாம்! இது சினிமாப் பாட்டு! அப்புறம் மாட்டிக் கொள்வீர்கள்! (போகிறார்கள்)

(2)

(ஒரு வாரம் கழித்து ஒரு நாள் காலை வேளை. பஞ்சாமிர்தம் தம் வீட்டுக் கூடத்தில் அமர்ந்து ஏதோ எழுதிக் கொண்டிருக்கிறார். அவர் பையன் ராஜு வெளியிலிருந்து வருகிறான்.)

ராஜு: அப்பா! உங்கள் பட்டம் விஷயம் என்ன ஆயிற்று? கஸ்தூரி ரங்கன் உங்களை வந்து பார்த்துத் தகவல் சொன்னாரா?

பஞ்சாமிர்தம்: இல்லையேடா! விநயகம் இருந்தா அவரையாவது அனுப்பி ஏதாவது துப்புக் கண்டுபிடித்துச் சொல்லுவேன்.

## டி.எஸ்.ஆர் & கோ.,

மதராஸ்–16, கும்பகோணம்.









## 'கோகுல்'

| ஸான்டால் டாய்லெட் பவுடர் | ஸான்டல் வுட் டாய்லெட் பவுடர் |
|---|---|

Criterion-TSR-1307

# இதுதான் டாடா-ஃபைஸன்-ராலீஸ் நிறைவு தரும் கற்பகத் தரு!

இதன் அடிமரம் டாடா-ஃபைஸன்-ராலீஸ் நிறுவனத்தை அறிவுறுத்துகிறது ...பாரத மண்ணிலே ஆழ வேர் பாய்ச்சி நிற்கின்றது. பாரதநாட்டு விவசாயிகளுக்குப் பல மருளும் பாதுகாப்புக் கோட்டையாக விளங்கும் அடிமரம், துயருற்றபோதெல்லாம் துணைதந்து வழிகாட்டி வளமை எய்த உதவுகிறது

இதன் கிளைகள் பரவிப் பரந்துள்ள ராலீஸ் ஸ்டாக்கிஸ்டுகளையும் வியாபாரிகளையும் சுட்டுகின்றன. அன்னோர் மூலம் ராலீஸ் நம் நாட்டின் எந்தெந்த மூலையிலும் உள்ள எளிய உழவரையும் எட்டி, அவர் தம் பிரச்சினைகளைத் தீர்க்கவும் ஓங்கித் தழைக்கும் உயரிய விளைச்சல்களுக்கான உரங்கள், பூச்சிக்காளான் கொல்லிகளை அவர் கைக்கெட்டவும் உதவுகின்றன.

இதன் கனிகள் வளமையின் சின்னம், டாடா-ஃபைஸன் ராலீஸ் தயாரிப்புகள், பணிகள் ஆகியவற்றின் உதவியால் நம் விவசாயிகள் அடைந்திடும் செழிப்பான அறுவடையின் அறிகுறி.

ஆக மொத்தம்
அருட் பொழிவு...
நிறைவேற்றம்
கண்ட கற்பேறு...
இதன் உருவகமே
வரமருளும் இம் மரம்!














அவரும் ஊரிலே இல்லை. இந்தக் கஸ்தூரி ரங்கனையும் காணோம்.

ராஜு: இந்தத் தெரு மூலையிலே கஸ்தூரி ரங்கன் வருவதைப் பார்த்தேன். ஒருவேளை உங்களைப் பார்க்கத்தான் வந்துகொண்டிருக்கிறாரோ என்னவோ? இதோ! அவரே வந்துட்டார்!

[கஸ்தூரிரங்கனும் அவர் நண்பர் சுந்தரமும் வருகிறார்கள்]

பஞ்சாமிர்தம்: வாங்கோ! வாங்கோ! உட்காருங்கோ!

[இருவரும் உட்காருகிறார்கள்]

கஸ்தூரிரங்கன்: நமஸ்காரம். சார் எப்பவும் பிஸியாக இருப்பவர். நான் தொந்தரவு கொடுக்கிறதை மன்னிக்கணும்.

பஞ்சாமிர்தம்: நமஸ்காரம்! நமஸ்காரம்! சத்குரு தியாகராஜ ஸ்வாமிகள் 'எவரநி நிர்ணயிஞ்சிரா' கீர்த்தனத்திலே என்ன சொல்றார்...'பகவானே! உன்னை எவர் என்று நிர்ணயித்தார்கள்? சிவனென்றா, மாதவன் என்றா, பிரும்மா என்றா?' என்கிறார். இது மாதிரிதான் சபாக் காரியதரிசிகளையும் என்னால் நிர்ணயிக்க முடிகிறதில்லை. பிரும்மாவா சபையை உருவாக்கணும். மகாவிஷ்ணுவா கட்டிக் காப்பாத்தணும். போட்டி போல் வாங்குகளைப் பரமசிவனாக ஒழித்துக் கட்டணும்! திரிமூர்த்திகளும் சேர்ந்த ஒரு மூர்த்தி. இப்போ என்னைத் தேடிண்டு வந்தார்னா அதிலே ஏதோ முக்கியத்துவம் இருக்கு.

சுந்தரம்: ஆகா! அழகாச் சொல்லிப்பிட்டேள்! முக்கியமான காரணம்தான்.

பஞ்சாமிர்தம்: ஆண்டு விழாவெல்லாம் வர்றாப்போலே இருக்கு?

கஸ்தூரிரங்கன்: ஆமா, ஆமா! எப்படியோ உதவி ஜனாதிபதியைத் தலைமை தாங்க ஒப்புக்க வச்சுட்டோம்.

பஞ்சாமிர்தம்: பேஷ்! பேஷ்! கஸ்தூரி ரங்கன் நினைச்சது நடக்காமலா போய்விடும்?

கஸ்தூரிரங்கன்: விழாவையொட்டி....

பஞ்சாமிர்தம்: விருதுகள் எல்லாம் வழங்கப் போகிறீர்களாக்கும்?

சுந்தரம்: அடேடே! சாருக்கு எல்லாம் தெரிஞ்சிருக்கே! இந்த விழாவையொட்டித் தயாராகும் மலரிலே உங்க கட்டுரை ஒன்று அவசியம் இடம் பெறணும்.

பஞ்சாமிர்தம்: உங்களுக்கு இல்லாததா?

கஸ்தூரிரங்கன்: ரொம்ப சந்தோஷம்! வாங்கிண்டு போகச் சுந்தரத்தை அனுப்பி வைக்கிறேன். நாங்க கிளம்பறோம்!

[எழுந்திருக்கிறார்கள்]

ராஜு (மெதுவாகப் பஞ்சாமிர்தத்திடம்): அப்பா! பட்டமளிப்பைப் பற்றிச் சொல்ல மறந்துவிட்டாரா?

பஞ்சாமிர்தம்: கஸ்தூரி சார்! இருங்கோ காப்பி சாப்பிட்டுவிட்டுப் போகலாம்! இந்தத் தடவை நீங்க அளிக்கும் விருது...

கஸ்தூரிரங்கன்: எஸ்! எஸ்!... மறந்தே போயிட்டேன்!... 'சங்கீத பஞ்சரத்தினம்' என்கிற பட்டம்!... யாருக்கு வழங்கப் போறோம் தெரியுமா?

பஞ்சாமிர்தம் (வெட்கத்துடன்): உங்க வாயாலே சொல்லுங்கோ! ஆனந்தமாகக் கேட்கிறேன்.



## அரசியல்வாதி

ஓர் அரசியல்வாதி 'சரி' என்று சொல்லிவிட்டால் 'பார்க்கலாம்' என்று அர்த்தம். பார்க்கலாம் என்றால் இல்லை என்பதற்கு அது அடையாளம். இல்லை என்று சொன்னால் அவன் அரசியல்வாதியல்ல என்று அர்த்தம்.

சங்கரபாண்டியன்

---

கஸ்தூரிரங்கன்: வஞ்சிக்கோட்டை பஞ்சாமி பாகவதர்னு ஒரு பெரியவர் இருக்கார்! மகாமேதை! அசப்பிலே உங்களைப் போலேயே இருப்பார்! அவருக்குத்தான் 'சங்கீத பஞ்சரத்தின' விருது! விழா அழைப்பிதழ் எல்லாம் அனுப்பி வைக்கிறேன். வந்து சேர்ந்து நடத்தி வைக்கணும். நீங்ககூட அவரைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கலாம்.

பஞ்சாமிர்தம்: அப்படியா?... நான் இப்பத்தான் கேள்விப்படறேன். முதலில் அவர் வேறு நபரா இருப்பாரோ என்று நினைத்தேன். அப்புறம் தெளிவாயிடுத்து!...கிளம்பிட்டேளா!...டேய் ராஜா! அவாளெல்லாம் கிளம்பிட்டா! காப்பி வேண்டாம்!

[இருவரும் போகிறார்கள்]

ராஜு: அப்பா! என்ன ஒரேயடியாய் மலைச்சுப்போய் உட்கார்ந்துட்டேள்! மூணு டம்ளர் காப்பியாகக் கொண்டு வருகிறேன்! இதெல்லாம் ரொம்ப சகஜம்! 'நிதிசால சுகமா'ன்னு தியாகய்யர் பாடினார். பட்டம் சால சுகமான்னு நீங்க பாடிட்டுப் போங்கோ?

பஞ்சாமிர்தம்: நீ வேறே என் வயிற்றெரிச்சலைக் கொட்டிக்கிறயா?

ராஜு: சும்மா தமாஷுக்குச் சொன்னேன். மன்னிச்சுக்கோங்கோ அப்பா. உங்க நண்பர் விநாயகத்தைப் பார்த்தால், கோபிச்சுக்கா திருந்தா, ஒரு விஷயம் சொல்லுவேன்.

பஞ்சாமிர்தம்: மாட்டேண்டா, சொல்லு! என்ன விஷயம்?

ராஜு: நீங்க அந்த விநாயகத்துக்கு இருபது ரூபாய் ரொம்ப நாளாகக் கொடுக்கணுமாம். அதை வாங்கறதுக்குத்தான் இந்த பஸ் ஸ்டாண்டு சம்பாஷணையை உபயோகப்படுத்திக் கொண்டாராம்!

பஞ்சாமிர்தம்: அட பாவி! பாக்கி வசூலிக்க இப்படி ஒரு தந்திரமா? சரி சரி! 'வசூல் பாக்கி ரத்ன'ங்கற பட்டத்தை நான் அவனுக்கு வழங்கறேன்! அவனாவது சந்தோஷப்படட்டும்!

ராஜு: நீ நாம ரூபமுலகு....

[பஞ்சாமிர்தம் முறைக்கிறார். ராஜு போகிறான்.]



# இயேசு கிறிஸ்து

## குட்டிக் கதைகள்

தொகுத்தவர்: கு. அழகிரிசாமி

(இங்கு காணப்படும் குட்டிக் கதைகள் பைபிள்-புதிய ஏற்பாட்டில் அர்ச் லூக்கா எழுதிய சுவிசேஷத்தில் உள்ளவையாகும். லூக்கா வைத்தியத் தொழில் செய்துவந்த ஒரு கிரேக்கர். விரோதிகளால் கொல்லப்பட்டு உயிர் நீத்தவர்)

### (1)

இரண்டுபேர் கோவிலுக்குப் பிரார்த்தனை பண்ணப் போனார்கள். அவர்களில் ஒருவன் பரிசேயன் (சமய ஆசாரங்களைக் கடுமையாக அனுஷ்டிக்கும் யூதன்). மற்றொருவன் ஆயக்காரன் (வரி வசூல் செய்பவன்). பரிசேயன் நின்றுகொண்டு பின்வருமாறு பிரார்த்தனை பண்ணினான்:

''ஆண்டவனே! நிர்ப்பந்தித்துப் பணம் பறிப்பவர்கள், அநியாயமாக நடப்பவர்கள், விபசாரம் புரிகிறவர்கள் ஆகியவர்களைப் போலவோ இந்த ஆயக்காரனைப் போலவோ நான் இல்லை. அதற்காக உன்னைத் தோத்திரம் பண்ணுகிறேன். என் சம்பாத்தியத்தில் நான் வாரத்துக்கு இரு முறை பட்டினி விரதம் இருக்கிறேன். பத்தில் ஒரு பகுதியைத் தானம் செய்கிறேன்.''

ஆயக்காரன் தூரத்தில் நின்று வானுலகை ஏறிட்டுப் பார்க்கும் துணிவுகூட இல்லாமல், தன் மார்பில் அறைந்து கொண்டு, ''ஆண்டவனே! பாவியாகிய என்மீது கருணைகொள்வாயாக'' என்று பிரார்த்தித்தான்.

இந்த இருவரில் பரிசேயனைவிட ஆயக்காரன் நேர்மை உள்ளவனாக வீட்டுக்குப் போய்ச் சேர்ந்தான் என்று உங்களுக்கு நான் கூறுகிறேன். ஏனென்றால் தன்னை உயர்த்திக் கொள்பவன் தாழ்த்தப்படுவான்; தன்னைத் தாழ்த்திக் கொள்பவன் உயர்த்தப்படுவான்.

### (2)

ஒருவனுக்கு இரண்டு குமாரர்கள் இருந்தார்கள். அவர்களில் இளையவன் தகப்பனைப் பார்த்து, ''தந்தையே, என் பங்குக்குரிய சொத்துக்களைப் பாகம் பிரித்துக் கொடுத்து விடுங்கள்'' என்று கேட்டுக் கொண்டான். அவ்வண்ணமே தகப்பன் தன் சொத்துக்களைப் பகிர்ந்து கொடுத்து விட்டான். பல நாட்கள் சென்ற பிறகு இளைய மகன் தன் செல்வத்தோடு ஒரு தூர தேசத்துக்குப் போய்த் தாறுமாறாக நடந்து எல்லாவற்றையும் செலவழித்து விட்டான். கையிலிருந்த பொருள் முழுவதும் செலவழிந்து விட்டது. அந்த நாட்டில் பஞ்சமும் வந்துவிட்டது. பிழைப்புக்கு என்ன செய்வது என்று தெரியாமல் அவன் தத்தளித்தான். கடைசியில் அந்த நாட்டுக் குடிமக்களில் ஒருவனிடம் போய் வேலைக்கு அமர்ந்து கொண்டான். அவனை வேலைக்கு வைத்துக் கொண்ட குடியானவன் தன் வயல்களில் பன்றிகளை மேய்க்கும்படி கூறி அவனை அனுப்பினான். பன்றிகள் சாப்பிடும் கனிட்டைத் தின்றுகூட வயிற்றை



1 யாருக்கு உயர் பதவி?



2 ஊதாரி மகன்



3 கடையர்களுக்கும் கதிமோக்ஷம்

நிரப்ப அவன் ஆசைப்பட்டான். ஆனால் அவனுக்கு அந்தத் தவிட்டைக் கொடுப்பார் கூட எவரும் இல்லை.

பிறகு ஒரு நாள் அவனுக்குப் புத்தி வந்தது. அவன் தனக்குத் தானே 'என் தகப்பனாரிடம் கூலி வேலை செய்பவர்களுக்குக் கூடப் போதிய உணவு இருக்கிறது. நானோ பசியினால் சாகிறேன். நான் என் தந்தை யிடம் போய், ''தந்தையே, நான் பரலோகத்துக்கு விரோதமாகவும் தங்கள் முன்னிலையிலும் பாவம் செய்தேன். தங்களுடைய குமாரன் என்று சொல்லிக் கொள்ளவும் எனக்கு அருகதை இல்லை. என்னைத் தங்களுடைய கூலிக்காரர்களில் ஒருவனாகச் சேர்த்துக் கொள்ளுங்கள்' என்று வேண்டிக் கொள்வேன்'' என்று சொல்லிக்கொண்டான். தான் எண்ணியவாறே தகப்பனிடம் வந்தான். அவன் தூரத்தில் வரும்போதே தகப்பன் அவனைப் பார்த்து விட்டான். உடனே ஓடிப் போய் மகனைக் கட்டித் தழுவி முத்தமிட்டான். அப்போது மகன், ''தந்தையே! நான் பரலோகத்துக்கு விரோதமாகவும் தங்கள் முன்னிலையிலும் பாவம் செய்தேன். தங்களுடைய குமாரன் என்று சொல்லிக் கொள்ளவும் எனக்கு அருகதை இல்லை'' என்று சொன்னான்.

தகப்பன் தன் வேலைக்காரர்களைப் பார்த்து, ''உயர்ந்த ஆடைகளைக் கொண்டு வந்து இவனுக்கு உடுத்துங்கள். கைக்கு மோதிரம் போட்டு, கால்களில் பாதரட்சைகளை மாட்டுங்கள். நன்றாகக் கொழுத்த கன்றுக் குட்டியைக் கொண்டு வந்து வெட்டிக் கறி சமையுங்கள். நாம் சாப்பிட்டுச் சந்தோஷமாக 'இருப்போம். ஏனென்றால் என் குமாரன் செத்துப் பிழைத்திருக்கிறான். காணாமல் போய் இப்போது காணப்பட்டிருக்கிறான்'' என்றான்.

அவ்வண்ணமே எல்லோரும் சந்தோஷமாக இருந்தார்கள்.

அதுவரையிலும் வயலில் இருந்த மூத்த குமாரன் வீடு நோக்கி வந்து கொண்டிருந்தான். வரும்போதே சங்கீதத்தையும் நாட்டியக் கும்மாளத்தையும் கேட்டான். வேலைக்காரர்களில் ஒருவனை அழைத்து, விஷயம் என்னவென்று விசாரித்தான். வேலைக்காரன் சொன்னான்: ''உங்கள் தம்பி வந்திருக்கிறார். அவர் சுகமாக வந்து சேர்ந்ததற்காக உங்கள் தந்தை கொழுத்த கன்றுக் குட்டியை வெட்டிக் கறி சமைத்திருக்கிறார்.''

மூத்தவனுக்குக் கோபம் வந்து விட்டது. அவன் வீட்டுக்குள் போகவே விரும்பவில்லை. இதை அறிந்த தகப்பன் வெளியே வந்து அவனை உள்ளே வரும்படி கூறினார். மூத்தவன் தகப்பனைப் பார்த்து, ''இத்தனை வருஷ காலமும் நான் உங்களுக்கு ஊழியம் செய்திருக்கிறேன். எந்தச் சமயத்திலும் நான் உங்கள் கட்டளைகளை மீறி நடந்ததில்லை. அப்படியிருந்தும் நான் என் நண்பர்களுடன் சந்தோஷமாக இருக்க ஓர் ஆட்டுக் குட்டியைக் கூட நீங்கள் கொடுத்தது கிடையாது. ஆனால் உங்கள் ஆஸ்தியை யெல்லாம் வேசிகளிடத்தில் தொலைத்துவிட்டு உங்கள் இளைய மகன் வந்ததும் அவனுக்குக் கொழுத்த கன்றை வெட்டிக் கறி சமைத்து விட்டீர்கள்'' என்று கூறினான்.

தகப்பன் அவனுக்குப் பின்வருமாறு கூறினான்:

' ''மகனே! நீ எப்போதும் என்னுடன் இருப்பவன். அதனால் என்னுடைய ஆஸ்தியெல்லாம் உன்னுடைய ஆஸ்திதான். ஆனால் உன் தம்பியோ செத்துப் பிழைத்திருக்கிறான். காணாமல் போய், திரும்பவும் காணப்பட்டிருக்கிறான். ஆகவே, நாம் சந்தோஷமாகவும் குதூகலமாகவும் இருப்பது தானே நியாயம்?''

**குறிப்பு: இயேசுநாதர் சொன்ன கதைகளில் மேற்கண்ட கதையே அதிகப் பிராபல்யம் பெற்றிருப்பதாகும்.**

## (3)

ஒருவன் தன் திராட்சைத் தோட்டத்துக்கு வேலையாட்களைக் கூலிக்கு அமர்த்துவதற்காக அதிகாலையில் வெளியே போனான். நாள் ஒன்றுக்கு ஒரு பணம் கொடுப்பதாக ஒப்புக் கொண்டு அவர்களைத் தன் திராட்சைத் தோட்டத்துக்கு அனுப்பினான்.

அப்புறம் மூன்றாவது மணிக்கு அவன் வெளியே போய்ச் சந்தை கூடும் இடத்தில் வேறு பலர் ஒரு வேலையும் இல்லாமல் சும்மா நின்று கொண்டிருப்பதைப் பார்த்தான். ''நீங்களும் திராட்சைத் தோட்டத்துக்குப் போங்கள். எது நியாயமான கூலியோ அதை நான் உங்களுக்குத் தருகிறேன்'' என்று கூறினான். அவர்களும், அவ்வாறே சென்றார்கள்.

அப்புறம் ஆறாவது மணிக்கும் ஒன்பதாவது மணிக்கும் அவன் வெளியே போய் அவ்வாறே செய்தான்.

பிறகு பதினோராவது மணிக்கு அவன் வெளியே போனான். மற்றும் பலர் வேலையில்லாமல் நின்று கொண்டிருப்பதைப் பார்த்து, ''ஏன் நீங்கள் இங்கே சும்மா நின்று கொண்டிருக்கிறீர்கள்?'' என்று கேட்டான்.

''எங்களை யாரும் கூலிக்கு அமர்த்தவில்லை'' என்று அவர்கள் சொன்னார்கள்.

''நீங்களும் திராட்சைத் தோட்டத்துக்குப் போங்கள். எது நியாயமான கூலியோ அது உங்களுக்குக் கிடைக்கும்'' என்று அவன் சொன்னான்.

சாயங்காலம் ஆனதும் திராட்சைத் தோட்டக்காரன் தன் காரியஸ்தனைப் பார்த்து, ''கூலிக்காரர்களை அழைத்து, கடைசியாக வந்தவர்களில் தொடங்கி முதலாவதாக வந்தவர்கள்வரை அவரவர்களுக்குரிய கூலியைக் கொடு'' என்று சொன்னான்.

பதினோராவது மணிக்குக் கூலிக்கு அமர்த்தப்பட்டவர்கள் வந்தார்கள். அவர்கள் ஒவ்வொருவரும் ஒரு பணம் வீதம் பெற்றுக் கொண்டார்கள்.

முதலாவதாகக் கூலிக்கு அமர்த்தப்பட்டவர்கள் வந்தார்கள். தங்களுக்கு அதிகக் கூலி

கிடைக்க வேண்டும் என்று அவர்கள் நினைத்தார்கள். ஆனால் அவர்களும் ஆளுக்கு ஒரு பணம் வீதமே பெற்றார்கள். அதைப் பெற்றுக் கொள்ளும்போது அவர்கள் அந்த நல்ல மனிதனைப் பார்த்து, ''கடைசியாக வந்த இவர்கள் ஒரு மணி நேரம்தான் வேலை செய்தார்கள். ஆனால் இவர்களையும் நாளெல்லாம் வெய்யிலில் கிடந்து உழைத்த எங்களையும் ஒரே மாதிரியாகப் பாவித்து விட்டீர்கள்'' என்று முணுமுணுத்தார்கள்.

ஆனால் திராட்சைத் தோட்டக்காரன் அவர்களில் ஒருவனைப் பார்த்துப் பின்வருமாறு சொன்னான் :

''நண்பா! உனக்கு நான் ஒரு குறையும் செய்யவில்லை. ஒரு பணத்துக்கு வேலை செய்ய என்னிடம் நீ சம்மதிக்கவில்லையா? உனக்கு உரியதை வாங்கிக் கொண்டு உன் வழியே நீ போ. உனக்குக் கொடுத்தது போலவே கடைசியாக வந்த இவர்களுக்கும் நான் கொடுப்பேன். எனக்குச் சொந்தமானதை என் இஷ்டம் போல் செலவிடுவது நியாயமில்லையா ? நான் நல்லவனாக இருப்பது உன் கண்ணை உறுத்துகிறதா ?''

'ஆகவே முதலாவதாக உள்ளவர்கள் கடைசியாகவும், கடைசியாக உள்ளவர்கள் முதலாவதாகவும் இருப்பார்கள். பலர் அழைக்கப்படுவார்கள்; ஆனால் சிலரே தேர்ந்தெடுக்கப்படுவார்கள்.

குறிப்பு : மேற்கண்ட கதையைப் படித்துவிட்டுத்தான் ஆங்கில ஆசிரியர் ரஸ்கின், ''கடையர்களுக்கும் கதிமோக்ஷம்'' என்ற அரிய நூலை எழுதினார். மகாத்மா காந்தி தென்னாப்பிரிக்காவில் இருந்த போது அந்த நூலைப் படித்தார். பூரணமாகத் தம்மை ஆட்கொண்டுவிட்ட அந்த நூலைத் தழுவித் தாமும் குஜராத்தி மொழியில் ஒரு நூல் எழுதினார். காந்திஜியின் வாழ்க்கையையே உருவாக்கிய ஒரு நூலுக்கு இந்தக் கதையே ஆதாரமாக விளங்கியது என்பது குறிப்பிடத் தக்கது.

## 4 தனக்காகச் சேர்த்தவை

ஒரு பணக்காரனுடைய நிலம் நன்றாக விளைந்தது. அவன், 'என்னுடைய தானியங்களைக் கொண்டு வந்து வைக்க இடமில்லையே, நான் என்ன செய்வேன்?' என்று யோசித்தான். பிறகு தனக்குத் தானே சொல்லிக் கொண்டான்: 'என் தானியக் களஞ்சியங்களை இடித்துப் பெரிதாகக் கட்டுவேன். அதில் என் தானியங்களையும் மற்றப் பொருள்களையும் கொண்டு வந்து வைப்பேன். அதன் பின் ''ஆத்மாவே! உனக்கு அநேக ஆண்டுகளுக்குத் தேவைப்படும் பொருள்களெல்லாம் சேர்த்து வைக்கப்பட்டிருக்கின்றன. நீ சௌகரியம் போல் இளைப்பாறி, சாப்பிட்டு, குடித்துப் பூரிப்புடன் இரு'' என்று என் ஆத்மாவிடம் சொல்வேன்.'

அப்போது கடவுள் அவனை நோக்கிக் கூறியதாவது: ''மூடனே! உன் ஆத்மா உன்னிடத்திலிருந்து இன்றிரவே எடுத்துக் கொள்ளப்படும். பிறகு நீ சேர்த்து வைத்தவை யாரைச் சேரும்?''

கடவுள் மேலும் சொன்னார்: ''கடவுளிடத்தில் தகவுரியவனாக இல்லாமல், தனக்காகப் பொக்கிஷங்களைச் சேர்த்து வைக்கிறவன் இப்படித்தான் இருக்கிறான்.''

---

### ரயில் கட்டணத்தை விட



### விமானக் கட்டணம் குறைவு

தகவல்: ''ஏழுமு''

இதைப் படித்ததும் எங்கே எங்கே என்று கேட்கத் தோன்றுகிறதல்லவா? வேறு எங்கு? செல்வ வளம் கொழிக்கும் அமெரிக்காவில்தான்.

பொதுவாக விமானக் கட்டணம், ரயில் கட்டணத்தை விடச் சிறிதே உயர்வாகும். அதிலும் நீண்ட தூரப் பிரயாணங்களில் சில சமயங்களில் ரயில் கட்டணத்தை விடக் குறைவு.

ஆகையால் பிரயாணம் செய்யும் அமெரிக்கர்களில் பெரும்பாலோர் (அதாவது மூன்றில் ஒரு பங்கினர்) விமானத்திலும், நான்கில் இரு பங்கினர் பஸ்ஸிலும், ஐந்தில் ஒரு பங்கினர்தான் ரயிலிலும் பிரயாணம் செய்கிறார்களாம்.

### எவரெஸ்டினும்



### உயர்ந்த சிகரம்!

உலகத்தில் உள்ள சிகரங்களில் எது உயர்ந்தது என்று கேட்டதும் சிறு குழந்தைகள் கூட ''எவரெஸ்ட்'' என்று கூறிவிடுவர். ஆனால் அந்தப் பதில் இனிமேல் தவறாகப் போய்விடும்.

எவரெஸ்டைவிட உயரமான சிகரத்தின் பெயர் 'மௌனக்கி' என்பதாகும். இது பசிபிக் மகாசமுத்திரத்தில் இருக்கும் வட மத்திய ஹவாய் தீவில் அமைந்திருக்கிறது. இதன் உயரம் சுமார் 32 ஆயிரம் அடிகள். (எவரெஸ்டின் உயரம் 29 ஆயிரம் அடிகளே.) 'மௌனக்கி'யின் அடி பாகம் சுமார் 18 ஆயிரம் அடிகள் கடலில் மூழ்கியுள்ளது.

ஆதாரம்: 'ஸண்டே ஸ்டாண்டர்ட்' - தகவல்: பரிமள சுந்தர்

இதோ:

# மாஜிக்

# கண்ணுக்கு வெண்மை
# கருத்துக்குப் புதுமை

ஆம், **மாஜிக்** என்றுலே அலாதி தான். அதன் அபரிமித வெண்மையாக்கும் ஆற்றல் வெள்ளைத் துணிகளைப் புதியன போல் வெளுக்கிறது. அதன் தூய்மை மணமோ துணிகளிலே நிலைக்கிறது. **மாஜிக்** கக்கும் நுரைவளம் இழைகளுக்கிடையில் உள்ள அழுக்குகளை நீரோடு கரைக்கிறது. வீட்டுச் சலவையை சுலபமானதாகவும் சிக்கனம் உள்ளதாகவும் செய்கிறது. பருத்தியோ, பட்டோ, நைலானோ, டெரீனோ, என் கம்பளித் துணிகளையும் கூட **மாஜிக்** குடன் சலவை செய்யுங்கள். **மாஜிக்** ஒரு விந்தை மிக்க சலவைத் தூள்!




**மாஜிக் வெண்மை, மாஜிக் மெருகு, மாஜிக் புதுமை!**

டாடா
தயாரிப்பு

CMTM-10-123.TM





# செவகி

— பூவை எஸ். ஆறுமுகம் —

'முன்னே பின்னே செத்திருந்தாத்தானே சுடுகாட்டுக்குப் பாதை தெரியும்?'' என்று ஒரு பழமொழி உண்டு.

ஆனால் முன்னே பின்னே சாகாமலே அலஞ்சிரான் காட்டுச் சுடுகாட்டுக்கு அந்தச் சிறுமி வழி அறிந்திருந்தாள்!

அவளுக்கும் பெயர் இருந்தது.

அநாதையாகவும் ஏழையாகவும் ஆகிவிட்டால், அவளுக்குப் பெயர் இருக்கக் கூடாது என்று விதியா, என்ன?

விதியின் விளையாகவும், விளையின் விதியாகவும் ஆகி அல்லது ஆக்கப்பட்டிருக்கும் அந்தப் பிஞ்சுக்குச் சிவகாமி என்று நாமகரணம் செய்யப்பட்டிருந்தாலும், 'செவகி' என்றால்தான் எருக்கலக் கோட்டைக் குடியிருப்பு வட்டத்துக்கு இனம் புரியும்.

''என்னோட பாவத்தைக் கொட்டிக்கிறது என்னைப் பெத்த அப்பனையும் ஆயியையும் கடவுளரு மரணத்துக்கு அனைச்சுக்கிட்டாலும், இந்தப் பஞ்சைப் பயதிக் குட்டியை மட்டும் அந்தச் சாமி மறந்திடலேன்னு, நான் தோணுது. ஊம், என்னமோ இந்த மண்ணை மிதிக்கப் பந்துப் பதினொரு பொறையைக் கண்டுப்புட்டேன். இந்த மட்டுக்கும் கஞ்சித் தண்ணிக்குப் பஞ்சமில்லே! பண்ணை சேர்வைக்கார ஐயா எம்புண்ணியத்தை ஏத்துக்கிட்டிருக்காக! அவுக நீடூழி வாழ வேணும். காளி ஆத்தா புண்ணியத்திலே!...ஆமா!'' என்று அவள் சொல்லிக் கொள்வாள்.

''தங்கச்சி செவகி !'' 'பாசத்தின் வெவ்வேறு சுருதியில் மூன்று குரல்கள் வளைத்துக் கொண்டு அந்தச் சிறுமியைத் திக்குமுக்காடச் செய்து விட்டன.

வெய்யில் உக்கிரமாக வறுத்தெடுத்தது. அதைப்பற்றிச் சட்டை செய்தால் கட்டுப்படியாகுமா, என்ன? நெற்றி வியர்வை நிலத்தில் வழிந்தது. நிலத்தின் தகிப்பு மண்டை உச்சியில் கொதித்தது. வேர்வையை மெள்ள வழித்துவிட்டவளாக, அவள் தனது பிஞ்சுக் கரத்தை நெற்றி மேட்டில் தளம் பரப்பிக் கொண்டு உவப்புடன் எதிர்வசமாகப் பார்த்தாள்.

''செவகித் தங்கச்சியோவ்...!''

அவள் பார்வையில் ஒரு துள்ளல்; உள்ளத்தில் ஒரு பரவசம்; நடையில் ஒரு துடிப்பு.

''அண்ணைச்சிங்களா!... இந்தாலே வந்துப்புட்டேன்!''

அன்புடன் சொல்லிக் கொண்டே, வலது கையிலிருந்த கவ்வல் கழியை இடது கைக்கு வசம் மாற்றிக் கொண்டு நடந்தாள். சுற்றுமுற்றும் பார்வையைப் பரப்பி விட்டவாறு நடந்தாள். ''ட்ரியோ!.... ட்ரியோ!...ம்... நடங்க!.... நடந்தா ஏலாது; ஓடுங்க!'' என்று கழியை இடைமறித்துச் செலுத்தினள் சிவகாமி.

''ம்மே!''

செம்மறி ஆடுகளின் நானாவிதமான குரல்களின் பரிணாம பேதங்களின் ஒலிச் சிதறல்களினூடே அவளது கவ்வல் கம்பு விளையாடியது; விளையாட்டுக் காண்பித்தது. சுடலைக் கரையை ஒட்டி உறவாட ஓடத் தலைப்பட்ட அந்தச் சாமி ஆடு அவளது கைக் கழிக்குக் கட்டுப்பட்டு அவளை நோக்கி ஓடி வந்தது.

''சவாசு !.... அதுதான் மருவாதை அக்குருமம் செய்யாங்காட்டி, எங்கவ்வ ஆளுக்குச் சோலி மிச்சம். என் தொண்டைத் தண்ணியும் வத்தாது. தூவின சோளக் கொண்டை பொரிஞ்சுகுற இம்மாம் கொதிப்பிலே நானு அலதிப்படறதுக்கும் வேலே இல்லே! ஆமா!....''

அலஞ்சிரான் காட்டுக் கம்மாயை அணைந்து தவழ்ந்து மிதந்த காற்றும், பகந்தளிர்ப் பரப்பாய் விரிந்திருந்த அரச மரத்து நிழலும் அவளுக்கும் அவளைச் சுற்றி நின்று அவள் பேச்சை 'உரக'டன் செவிமடுத்துக் கொண்டிருந்த செம்மறி மந்தைக்கும் பேராதரவாக அமர்ந்தன. 'கெட்ட படைக இதுக. ஒண்ணு கலைஞ்சா போதும், ஒருமிக்க அத்தனையும் ஒண்ணு பின்னாடி ஒண்ணாக் கலைஞ்சிடும்!... பாவம், வாயில்லாச் செம்மம்! இதுங்களுக்குத் தெரிஞ்ச புத்தி அம்புட்டுத்தான்!.... வாயில்லாச் சீவன்களாச்சும் ஒரு கம்புக்குப் பயப்படுது; ஆளுக்க, வாயுள்ள சென்மங்க

தான் எதுக்கும் பயப்பட மாட்டேங்குதே!'' ஏதேதோ நினைப்புக்கள் விதரணையுடன் இப்போதும் அந்தப் பிஞ்சு மனத்தைச் சுற்றி வளைத்தன. பனந்தோப்பில் கட்டுச் சோறு சாப்பிட்டுக் கொண்டிருந்த கிழவன் ஒருவனின் சோற்றையும் செம்மறி ஒன்று பதம் பார்த்து விட்டது. ஈவிரக்கமில்லாமல் அதன் காலை சுக்கான் கல் கொண்டு தாக்கிவிட்டான் கிழவாடி. பதைத்துப் போனாள் சிறுமி. ரத்தம் கசிந்தது செம்மறிக்கு. இவளுக்கும் ரத்தம் கசிந்தது, கண்ணீர் உருவில்!

வெண்ணிறப் புள்ளிக் கோலம் கொண்டிருந்த 'கிடாரி'யைக் குனிந்து அணைத்த வண்ணம் குந்தினாள் அவள். கண்ணீர் சொரிந்தாள். அடிபட்ட காலைத் தடவிக் கொடுத்தாள். அந்தக் கால் நடுங்கியது. அவளது பிஞ்சுக் கரங்களும் நடுங்கின.

''தங்கச்சிப் பொண்ணே! எம்மாவாட்டி தொண்டை வலிக்க அலட்டுறதாம்? இந்தாலே, ஒனக்குப் பனம்பழம்! சப்பித் தின்னு செவகி!'' என்று குரல் கொடுத்த வண்ணம் அவளது தலையுடன் உரசிக் கொண்டு குந்தினான் 'மாட்டாங்காரப் பயல்' ஒருவன். அவன்தான் ராமையா. அரும்பு மீசை துளிர் விட்டிருந்தது. இடது பக்கக் காதிடுக்கில் துண்டு பீடி இருந்தது.

சிவகாமி ஏறிட்டுத் திரும்பினாள். வேர்வையும் விழிநீரும் கணத்தில் மறைய, இளநகை உதிர்த்து எழும்பினாள். பனம்பழத்தைப் பரிவுடன் கை ஏந்திக் கடித்தாள். சக்கையைத் துப்பிவிட்டு இனிப்பின் சுவையை அனுபவித்தாள். தாகத்தின் வறட்சி இப்போது சற்றே உள்ளடங்கி விட்டிருந்தது போலும்!

மாடு மேய்த்த சிறுவர்கள் மூவரின் கட்டுக்காவலுக்கு உட்பட்டிருந்த ஆடுமாடுகள் சரணை வகுத்துப் பிரிந்து ஒதுக்கமாக நின்றன. பாதத்தடியில் முளைத்திருந்த காய்ந்த புல்லைக் கடித்தன.

''தங்கச்சி அழுதுக்கிட்டிருந்ததோ?'' என்று கவலை மூளக் கேட்கலானான் வாண்டு ஒருவன். அவன் பிரமன்: தலைமுண்டாக ஏக அமர்க்களமாக இருந்தது. படுசுட்டி. வால் ஒன்றைத்தான் கடவுள் வைக்கவில்லை அவனுக்கு!

''ஆமாடாலே! அப்படித்தான் தோணுது!'' என்று ஆமோதிப்புக் கொடுத்தான் மற்றொரு சிறுவன் ரங்கன்.

''ஆமாம், அழுதேன்தான். எம்புட்டு அந்தச் செம்மறியோட காலை ஒரு கிழம் கல்லை வீசி நதங்கடிச்சுப்புட்டான். அந்தச் செம்மறிக்கு எம்மாந் தொலைவுக்கு வலிக்கும்?.... நாம பேசி வலியை ஆத்திக்கிடலாம். அதுக்கு அந்தப் பாக்கியம் இல்லையே! அதை நெனைச்சா, எனக்கு இந்தப் பனம்பழம்கூட வேண்டலேயே!'' — ஆத்திரமும் அழுகையுமாக விதரணை தப்பாமல் பேசிய சிவகாமி, சட்டென்று செம்பாதி மிச்சம் இருந்த பனம் பழத்தை எட்டி வீசி விட்டாள்!

''எங்க தங்கச்சி எப்பவுமே ஒரு தனிப் புள்ளேயாக்கும்! அதோட புத்திசத்துக்கும் ஈவிரக்கத்துக்கும் அது தலையிலே பகவான் இப்படிக் கொத்தவாக்கிலே எழுதிப் போட்டிருக்கப்படாது!'' என்று தாழ் குரலில் சொன்னான் ராமையா. அவனோடு ஒத்த வயசு கொண்ட ரங்கனும் அந்தப் பேச்சை அனுசரித்துத் தலையை அசைத்தான்.

''தலை மேலே அழுத்தி அழுத்தி எண்ணெய் தேய்ச்சாலும், தலை பொறுத்தையா வசம் மாத்த ஏலும் நம்மாலே!'' — அமெரிக்கையான பதத்துடன் விடை பகர்ந்தாள் சிவகாமி. அயர்வின் இறக்கம் அவளது அழகுக் கண்களைச் சொக்க வைத்தது.

''தங்கச்சி! ஒனக்குத் தூக்கம் சொக்குதே! வேணும்னுக்க, கொஞ்ச நேரம் நீ நிழலிலே படுத்துத் தலையைச் சாய்ச்சுக்க! உம்புட்டு செல்வங்களை நாங்க கவனிச்சிக்கிடுறோம்!'' என்று தெரிவித்தான் ராமையா.




அப்போது பத்துத் தப்படி தொலைவில் இருந்த தாராடிக் காட்டிலிருந்து நரிகளின் ஊளைச் சத்தம் காட்டுக் கத்தலாக ஒரே சீரான கருதியுடன் எதிரொலிக்கத் தொடங்கி விட்டது.

ஒரு ரவைப் பொழுது, சிறுமி சிவகாமி அசந்து போனாள். அவள் உடல் உதறத் தொடங்கி விட்டது. ''ஆத்தாடி! வேணும், வேணும்! நரிப் பண்ணைங்க காட்டிலே கத்துது. தப்பித் தவறி அந்தப் பக்கம் செம்மறிக் குட்டிங்க போயிடுச்சின்னா அதுகளை அடிச்சுக் குதறிப் போட்டுத் தின்னுப்புடுமே! அப்பாலே எங்க பண்ணை ஐயா என்னோடே உசிரையே வாங்கிப்பிடுவாரே!''

என்று பதற்றம் மாளாமல் பதைப்புடன் சொல்லிவிட்டு எழுந்தாள் சிவகாமி.

“டீர்யோ! இந்தா.... ஓடுங்க...! ம்.... ஏலே, இங்கிட்டு மறுகு....! அட..... என்ன அழும்பு பண்ணுறீங்க? நானு அப்பன் ஆயி இல்லாத அநாதைதானேன்னு நீங்க அக்குரும்ம் பண்ணினுக்க, அப்பாலே எனக்குக் கெட்ட கோவம் வருமாக்கும்! ம்.... அப்படிப் போங்க கடைக்கு!...பலே...!”

கவ்வல் கழியை முறுக்கி வீசியவாறு, செம்மறி மந்தையை அடக்கிக் கொட்டடியின் உட்புறம் செலுத்தினாள் சின்னப் பெண் செவகி – ஆமாம்; செவகி என்கிற சிவகாமி

இப்போதுதான் அப்பிஞ்சு நெஞ்சு நல்ல மூச்சு விட்டது. கொட்டடியை மீண்டும் ஒரு முறை கண்ணோட்டம் செலுத்தினாள். ‘நுப்பத்தஞ்சு செம்மறியும் கனகச்சிதமா வந்து சேர்ந்திடுச்சுது: காளியம்மன் தயவிலே எங் கடமை இந்த நாள் வரைக்கும் யாதொரு விக்கினமும் இல்லாமல் நிறைவேறிக்கிட்டு வருது!.... எண்ணிக்கும் இது மாதிரி நடந்துக்கிட்டு வந்தால், அதுவே என்னோட அதிர்ஷ்டந்தான்!’

சிவகாமி கையில் இருந்த கவ்வல் கம்பை வைக்கோல் பரண் இடுக்கில் செருகி வைத்துவிட்டு, ஈசான்ய மூடுக்குக்கு மடங்கி, அங்கு கிடந்த சாணத்தை எடுத்து எருக் குழியில் போட்டுத் திரும்பி, கொன்றைப் பூக்கள் சிதறிக் கிடந்த மரத்தின் ஒண்டலில் இருந்த நீர் முட்டியைக் கவிழ்த்து, நீர் எடுத்துக் கைகால் முகம் கழுவித் துடைத்துக் கொண்டு, ‘ஆத்தாடி!’ என்று வாசல் கட்டாந்தரையில் குந்தினாள். தரை வெக்கை ஜுனனமும் தாளவில்லை. என்னவோ நினைப்பு வந்தவளாக, ‘சடக்’கென்று எழுந்து வெளித் திண்ணையில் ஏறி, விட்டத்தில் இருந்த வாங்கரிவாளை எம்பி எடுத்து இறங்கினாள். ஒழுங்கையில் நின்ற வேப்ப மரத்தில் ஒரு ‘குடங்கை’ தழைகளைத் திருகி ஒடித்து, அள்ளி வந்து செம்மறிக் கிடைக்கு மத்தியில் விசிறிப் போட்டாள். தன்னை நன்றிச் சுரப்பின் ஈரத்துடன் பார்த்து விட்டுத் தழைகளைத் தின்னத் தொடங்கிய வாய் பேசத் தெரியாத அந்தச் செம்மறிக் கூட்டத்தை வைத்த கண் வாங்காமல் பார்த்துக் கொண்டே யிருந்துவிட்டுத் திரும்பினாள் சிறுமி. ‘அந்தச் சாமி ஆடு என்னமாப் பார்க்குது என்னே? ஆறு பேரைப் புரிஞ்சுக்கிடுற வகையைச் சாமி இதுங்களுக்கு நல்லாத்தான் குடுத்திருக்குது!’

அந்தச் ‘சாமி ஆட்டி’ன் நினைவுடன் அவள் திரும்பி வாசல்வெளிக்கு வந்தாள். ‘பாவம், வார வைகாசி மாச மாரியம்மன் பொங்கலுக்கு இந்தச் சாமி ஆட்டைத்தான் வெட்டப் போறாங்களாம்! சேர்வைக்கார ரோட தலைச்சன் பொண்ணுக்கு அம்மன் பூட்டினப்ப, அதுக்காக இப்பிடி நேந்துக் கிட்டாகளாம்!.... ஆமா, ஊராளும் ஆத்தா தன் குஞ்சையே காவு கொடுன்னு எப்பவாச்சும் கேக்குமா?... என்னமோ, இந்தச் செம்மறிக் கிடாவோட விதம் இன்னும் கொஞ்ச காலத்துக்குத்தான்! ஐயோ, பாவம்!’ ம்.... பொங்கல் சமயத்துக்கு மொதலாளி காளிலே விளுந்து, அதை வெட்டாமப் பார்த்துக்கிட வேணும்!.... அந்த ஆத்தாதான் ஐயாவோட மனசான மனசுக்குள்ளாறப் புகுந்து அவர் மனசை



மாத்த வேணும். இந்த ஏழைக்குட்டி சொல்லு எந்தத் தொலைக்கு அம்பலம் ஏறுமோ, அந்தத் துப்பு ஆத்தாளுக்குத்தான் வெளிச்சம்!....' இமை விளிம்புகளில் சரம் கோத்திருந்த விழி நீரை விலக்கிக் கொண்டாள் சிறுமி.

பாசம் புதுப் புனலாகப் பெருக்கெடுத்தது. அந்த வாக்கின் முடிப்பில், அந்தச் சிறுமி தன்னைப் பெற்ற இரு ஜீவன்களைப் பற்றியும் மறக்கம் போனவிலை நினைவுகூர்ந்தாள்.

வானம் பார்த்த சீமையான ராமநாதபுரம் மாவட்டத்திலே, விவரந் தெரிந்த நாள் தொட்டுத் தன்னை இமையால் வைத்து மூடிக் காப்பாற்றிப் போற்றிய அந்த ஏழைத் தாய் தந்தையரின் இனிய பாச நினைவு அந்தப் பிஞ்சு நெஞ்சை விட்டு என்றுமே அகலாது—அகலவும் முடியாது அல்லவா?

'மானம் பார்த்த சீமையை விட்டுப்புட்டு இங்கிட்டுக் காவேரி ஆத்தா விளையாடுற தஞ்சாவூர்ச் சீமைக்கு வந்தோம். அப்ப எங்க அப்பன் மிராவாசலிலே ஒரு சாயாக் கடையிலே வேலைக்கு இருந்திச்சு; ஆயி அக்கம் பக்கத்திலே வூட்டு வேலே பார்த்திச்சு. எனக்கும் ஒரு வேலே கெடைச்சுது. அதானுக்கும், ஆறு ஆவன்னு கத்துக் குடுக்கிற வேலே!' சிந்தனையிலும் சிரிப்பு வந்தது. ஏழைச் சிவகாமி சிரித்தாள். அநாதையென்றும் சிரிக்கக் கூடாதா என்ன?

''அக்கா!''

செவி கூட்டார்ந்தபடியே திரும்பினாள். பாவாடை முந்தியில் முடிந்து வைத்திருந்த புளியங் கொழுந்துகள் அப்போது அவள் உள்ளங் கையில் இருந்தன.

''யாரு, தங்கச்சியா? வா!'' என்றாள் சிவகாமி.

''இந்தா, ஒனக்கு மாம்பயம்!''

அந்தச் சின்னப் பெண்ணுக்கு 'ழ' என்றால் பயம் போலும்!

எச்சில் பழத்தைத் தோல் உரித்து நீட்டினாள் சேர்வையின் தலைப் பெண் பூவம்மா.

''நீ தின்னு தங்கச்சி!''

''ஏனும்? எச்சி பட்டிருச்சேன்னு?''

''அதெல்லாம் இல்லே தங்கச்சி. பாசத்துக்கு எச்சி ரொம்பத் தூரமாம். ஒரு பண்ணாடி எங்கிட்டவே ஒரு கடுத்தம் சொன்னுக. அப்பப் புரியலே. இப்பப் புரியுற மாதிரியிருக்கு!'' — வயதை மீறிய விதரணைப் பேச்சல்லவா?

''நீ என்னத்தையோ செப்புறே! எனக்குப் புரியாது! சரி, நீ இத்தைத் திங்கப் போறியா, இல்லே, நானு அழுவட்டுமா?'' ஜரிகைப் பாவாடை பளபளத்தது. கண்ணீரும் பளபளத்தது!

''அழுவாதே ராசாத்தி! இந்தாலே தின்னுப்புடுறேன்!'' என்று ஈரச் சிரிப்புடன் எச்சில் தோலை வாங்கி மென்று விழுங்கி விட்டு ஏப்பம் பறித்தாள், சிவகாமி. சற்று முன் பசி வயிற்றைக் கிள்ள, அவள் உட்புறத்தை நோக்கி ஓரக் கண் பதித்த செயலை அவள் மறக்கவில்லை; அதற்குள் ஏப்பம் வந்து விட்டதே!

பூவம்மா அம்மை பூட்டிக் கிடந்தபோது, அவள் முகத்தைக் காண முடியாமல் வெளி வாசலிலேயே புழுவாய்த் துடித்தாளே சிவகாமி, அதைக் காலம் மறக்க முடியுமா?

'அப்பன்காரருக்கு அம்மை வார்த்திச்சு. வார்த்த குட்டிலேயே அவுக ஆவியும் பிரிஞ்சிது. அப்பாலே இருபது நாளுக்குள்ளே அம்மா நோயிலே விழுந்தாங்க. அது கதையும் முடிஞ்சிருச்சு. எனக்குத் தஞ்சாவூரு புடிக்கலியே. அறந்தாங்கி நாட்டுப் பக்கத்துக்கு ஒரு சித்து வண்டியிலே தொங்கிக்கிட்டு வந்தேன். அப்ப செவ்வாச் சந்தையிலே களைச்சுக் கலை தாங்கிப் படுத்துக் கெடந்த என்னே அழைச்சுச் சோறு போட்டுச்சு சோத்துக்கார ஆத்தா ஒண்ணு. அப்பதான், இந்தச் சேர்வைக்காரர் மாடுவாங்க வந்தவரு. எம்மேலே பச்சாத்தாபப்பட்டு என்னேயும் கூட்டிக்கிட்டு வந்து ஆடு மேய்க்கிறத்துக்கு வேலைக்கு வச்சுக்கிட்டாரு. மனுசன் கோவம் எட்டுருக்குத் தெளிவு. எனக்கு அவர் மீசையைக் கண்டா எப்பவும் பயந்தான்!...'

* * *

இரணிய வேளை. சித்திரை வெயிலின் கள்ளாப்பு இலேசாபாசாகப் படியத் தலைப்பட்டிருந்த வேளை அது.

வெளி வாசல் ஒட்டுத் திண்ணையின் ஒட்டில் ஒட்டி நின்றாள், ஆடு மேய்க்கும் சின்னப் பெண் சிவகாமி.

அவள் மேனி ஏன் அப்படி அல்லாடித் தள்ளாடுகிறது?

அவள் முகம் ஏன் இப்படி அடமாங்காயாக வீங்கி யிருக்கிறது?

அவளது கண்கள் ஏன் அப்படி மிளகாய்ப் பழமாகச் சிவந்து கிடக்கின்றன?

கண்ணீர் வழிந்து கொண்டே யிருந்தது.

'ம்...ம்...மே!'

செம்மறி மந்தை பட்டறைக்குள் பிதுங்கி வழிந்தது. அவற்றின் குரல்களிலே ஒருவகை ஓலம் கிளம்பிக் கொண்டிருந்ததே!

சிவகாமிக்கு அஸ்தியில் ஜுரம் கண்டது.

உள்ளே நடையில், சேர்வைக்காரர் இரைச்சல் போட்டுக் கொண்டிருந்தார். ''ஆமாங்கிறேன், மாமு!... அந்தச் சின்னச் சாதிப் பய எம் மச்சினன் முழு மாடு புடிக்கிப் பயலுங்கிறேன். நோட்டு பேரிலே உள்ள கடன் ரூவா ஆயிரத்தையும் ஐசா பைசாவா தீர்த்துப்புடாட்டி, தாவா போட்டுப்புடுவேன். இந்த ஏகாம்பரம் சங்கதி அந்த ஐயாவுக்குத் தெரியாது போல!... கொண்டான் கொடுத்தான் யாவாரமாச்சேன்னு, மேப்புச் சாப்பாக விட்டாக்க, இப்ப வட்டியைக் கடிச்சது பத்தாம, முதனிலேயே கடிக்கப் பார்க்கிறானும்!... நரிக்கு நாட்டாமை குடுத்தா அது கெடைக்கு ரெண்டு குட்டி கேட்குமாம்! — அந்தக் கதையாத்தான் இருக்குது!... என்னைப் பார்த்து ஈவிரக்கமில்லாதவன்னு நாக்கிலே நரம்பில்லாமச் செப்புறானுமே!... கேளுங்க ஒரு நடப்பை! ஒரு பயணம் செவ்வாச் சந்தையிலே ஒரு அநாதைக் குட்டியைக் கண்டேன். அந்தடியும் அதைக் கையோட கூட்டியாந்து ஆடு மேய்க்க வைச்சுக்கிட்டு வயிறு கொண்ட மட்டும் சோறு போடுறேன். வருசத்துக்கு இரண்டு திருப்பம் பாவாடை, சட்டை வாங்கிக் குடுக்கிறேன். நாங்க சாப்பிடுற சாப்

# லாபோனி ஸ்னோ

## முகத்தில் பனியின் மென்மை மிளிரச்செய்கிறது

லாபோனி ஸ்னோ உங்கள் முக அலங்காரத்தைப் புத்துணர்வுடன் துவங்கவைக்கிறது. அழகூட்ட ஆரம்பிக்குமுன் இதில் சொற்ப அளவைப் பூசுங்கள், போதும்; உங்கள் ஒப்பனை எவ்வளவு சுலபமாகப் பொலிகிறது என்பதை கண்டு நீங்கள் ஆச்சரியப்படுவது நிச்சயம். லாபோனி ஸ்னோ ஈரப்பசையையும் அளிக்கக்கூடியது என்பதை மறந்துவிடாதீர்கள் !




இது கல்கத்தா கெமிகல் தயாரிப்பு

CTC-4 TAM




பயில்வான்: எனக்கு யாருடனும் சண்டை போடறதுன்னு துளிக்கூடப் பிடிக்காதுங்க. சமாதானமாக வாழணும். அதுதானுங்க என் குறிக்கோள்.

பாடுதான் அதுக்கும் போடுறேம்! அந்தப் பயலாட்டம் வேலையாளுக்கின்னு கீரை மட்டை குழம்பு ஆக்கி ஊத்திற புள்ளியா நான்? வேணும்னு அந்திக்கு அந்தக் குட்டி செவலி வரும்; கைக்கு மெய்யாக் கண்டு தண்டிக்கிடுங்கங்கிறேன் மாமு!... எங்கிட்ட இரக்கத்துக்குப் பஞ்சமே இல்லே!.... ஆனா, என் மனசு ஒரு காரியத்தை ஏத்துக்கிட ஒப்பலேன்னுத்தான், எனக்குக் கண்ணு மூக்கு தெரியாம கோவம் வரும்!...ஆமா!...''

ஏகாம்பரஞ் சேர்வையின் பேச்சு முழுதும் சிறுமி சிவகாமியின் நெஞ்சில் எதிரொலி பரப்பத் தவறவில்லை.

மீண்டும் செம்மறிகளின் கதறல் கூடியது.

சிவகாமி உயிரைக் கையில் பற்றி நின்றாள். குதிகால் இரண்டிலும் தைத்திருந்த நெருஞ்சி முட்களின் உபாதை மண்டையை உறுத்திற்று.

''என்னது, செம்மறிங்க கத்துது? அந்தி சாயலே. அதுக்குள்ளாறவா மேய்ச்சல் விட்டுத் திரும்பிடுச்சு!'' என்று தனக்குத் தானே கேட்டுக் கொண்டே, குவளைத் தண்ணீருடன் வாசற்புறம் வந்தார் சேர்வை.

குவளைத் தண்ணீரைத் திண்ணை முந்தலில் வைத்துவிட்டு, சிவகாமியை உன்னிப்பு சேர்த்துப் பார்வையிட்ட சேர்வை, ''ஏ குட்டி செவலி! என்ன இன்னிக்கு நேரத்தோட திரும்பியாச்சு?'' என்று அதிகாரத் தோரணையுடன் கேட்டார். அவருடைய கண்கள் செம்மறிக் கிடைக்குத் தாவி மீண்டன.

சிறுமி சிவகாமி பதில் ஒன்றும் சொல்லாமல் கேவிக் கேவி அழுதாள். கெண்டைக் காலை உரசியபடி கவ்வல் கழி கிடந்தது.

''ஏலே, என்ன சங்கதி? விசயத்தைச் சொல்லு குட்டி!'' என்று அதட்டினார் சேர்வை. மீசையை நெருடி விட்டுக் கொண்டார். தோளில் கிடந்த 'லேஞ்சு' நழுவ வேளை கனித்துக் கொண்டிருந்தது.

பயத்துடன் சிவகாமி தன் பண்ணையின் முகத்தை நிமிர்ந்து நோக்கிப் பரிதாபம் சூழப் பார்த்தாள். ''வந்துங்க... ஒரு தப்புத் தண்டா நடந்திருச்சு!... வந்து...'' என்று பேச்சைத் தொடர வலியிழந்து, நெஞ்சின் 'வலி'யுடன் துடிதுடித்து நின்றாள்.

ஏகாம்பரம் சேர்வைக்கு வேர்த்துக் கொட்டியது. படபடப்பு மிஞ்சியது. ''பேச்சை முழுங்கிறியே? என்ன நடந்திச்சு? என்னத்தை முழுங்கினே சனியனே?'' என்று கோபத்தில் சோனம் பொரிய, குரலில் சிதற, முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடிக்கக் கேட்டார்.

குலை நடுங்கிப் போனாள் சிறுமி சிவகாமி. நெஞ்சில் கை வைக்காப்டி... பயம் இழைந்த விழிகளைத் தாழ்த்திக்கொண்டு செருமலுடன், ''...உருமம் தாண்டியிருக்கும். மண்டை உடை தானலே. அலஞ்சிராங்காட்டு கம்மாய் முக்கத்திலே ஆலமரத்துத்தூரிலே செம்மறிங்களை அணைச்சுப்புட்டுக் குந்தினேன். புல்லு மேய்ஞ்சுக்கிட்டிருந்துச்சுங்க ஆடுங்க அம்புட்டும். அப்ப வந்து இம்மிப் பொழுதுக்குக் கண்ணு அசந்திருக்கேன். முழிச்சுப் பார்த்தாக்க....ஐயையோ, எங்க ராமையா அண்ணாச்சி இருந்திருந்தாக்க, இப்படிப்பட்ட இடுசாமம் நடந்திருக்க மாட்டாதுங்க!...'' என்று மீண்டும் தயங்கினாள்.

பொறுமையை இழந்த சேர்வை கையை ஓங்கிச் சிவகாமியைக் குறி வைத்து நகர்ந்தார். ''சீ! சொல்லு விசயத்தை!... இல்லே, புட்டுப்புடுவேன்!'' என்று கூச்சலிட்டார்.

சிவகாமியின் விம்மல் தொடர் சேர்த்தது. ''வசம் மாறி ஓடிப் பூட்ட அந்தச் சாமி ஆட்டை நரிப் பண்ணை இழுத்துக்கிட்டுப் போயிடுச்சுங்க, எசமான்!'' என்று ஒரே மூச்சில் விசயத்தைப் பிட்டு வைத்து விட்டாள்.

ஏகாம்பரஞ் சேர்வை 'சாமியாடி'யாக உருக் கொண்டார். ''அடி பாவி!... ஏழரை நாட்டானே!... நேர்ந்துக்கிட்டிருந்த சாமியோட செம்மறியாச்சே அது? தூத்தேறி!'' என்று தம்மை மறந்து கர்ஜனை புரிந்தார். அத்துடன் நின்றாரா? — துடித்த மேனியுடன் வெறி துடிக்க, சிறுமி சிவகாமியை நோக்கி ஒரே எட்டில் பாய்ந்து, அவள் தலை முடியைக் கை இடுக்கில் வளைத்துப் பற்றி, அவளது முதுகிலும், கன்னங்களிலும் மாறி மாறி, மாற்றி மாற்றி அடித்தார்.

சுருண்டு விழுந்தாள் சிவகாமி!

''மாரியாத்தாளுக்கு நேர்ந்துக்கிட்டிருந்த செம்மறியை இப்படி உசிரோட பறி கொடுத்திட்டியே, மூதேவி!... ஆத்தா என்ன வினை பண்ணப் போறளோ?'' என்று அலறி, காலடியில் கிடந்த கவ்வல் கழியைக் குனிந்து எடுத்தார் சேர்வை.

அப்போது, உள்ளேயிருந்த முதியவர் வந்து சேர்வையைத் தடுத்தார்.

''நீங்க அங்கிட்டாலே எட்டுங்க!'' என்று ஆத்திரம் பொங்க உரைத்தார் சேர்வை.

ளைக் கழியை ஓங்கி, சிவகாமி மீது வீச எத்தனித்த நேரத்தில் குளத்திலிருந்து சேர்வையின் அருமைப் பிள்ளைத்தாச்சியும் செல்வ மகளும் மீண்டனர். ''மச்சான்! பாவம், அது அனாதை!'' என்று கெஞ்சினாள் அவள் — வள்ளியம்மை.

''அக்கோ!'' என்று குறுக்கே மறித்தாள் பூவம்மா.

தன் மகளையும் மனைவியையும் இடது கைப்பிடி கொண்டு ஒதுக்கிவிட்டு, வலது கையில் இருந்த கழியை 'வாகு' பார்த்துக் கைலாகுடன் ஓங்கினார் சேர்வை.

தரையில் கதறித் துடித்துச் சுருண்டு கிடந்த சின்னப் பெண் சிவகாமி தலையை அப்பால் திருப்பிக் கொண்டாள்!

கழி கட்டாந்தரையில் 'டொக்'கென்று அடிபட்டது.

அக்கம் பக்கத்துக் குடிபடைகள் கும்பல் கூடி விட்டனர்.

அவர்கள் ஒருவருக்கும் கடவுள் வாயைப் படைக்க வில்லையா? வார்த்தையைக் கொடுக்கவில்லையா?...

மீண்டும் மூர்க்கம் அடைந்த ஏகாம்பரஞ் சேர்வை, மறுபடியும் அந்த அநாதைச் சிறுமி சிவகாமியின் தலைமயிரைப் பற்றினார்.

செம்மறிக் கூட்டம் ஓலமிட்டது!

''ஐயோ! எசமான்!... இனிமே சத்தியமா நானு இப்படி மெத்தனமா இருந்துப்புட மாட்டேனுங்க. என்னை அடிக்காதீங்க. இனியும் என்னாலே தாங்க ஏலாதுங்க சாமி! இனியும் இந்த அநாதையை நீங்க அடிச்சீங்கன்னா, அந்தப் பாவம் தெய்வம் திருவுளத்துக்குக்கூட அடுக்காதுங்க!'' என்று கைகளைக் குவித்துக் கும்பிட்டுக் கெஞ்சிக் கதறினாள் செவலி.

''தெய்வம் திருவுளத்துக்கா அடுக்காது? இன்னமும் ஒன்னைப் போட்டு நொறுக்குறேன். எந்தத் தெய்வம் வந்து என்னைக் கேட்குதுன்னு பார்க்கிறேனே!'' என்று நிர்த்தாட்சண்யமான கோபம் பொரிய, எகத்தாளமாகச் சிரித்தபடி, சிவகாமியின் தலைமுடியை இறுக்கிய வண்ணம், அவள் முதுகில் அடிக்கக் கைகளை ஓங்கினார் ஏகாம்பரம்.

அவ்வளவுதான்!

சிறுமி சிவகாமி தன் மூச்சை ஒருமிக்கச் சேர்த்துக் கொண்டு, தலைமுடியைச் சேர்வையின் கைப்பிடியிலிருந்து வெறியுடன் விடுவித்துக்கொண்டு எழுந்தாள். சேர்வையை நோக்கி உக்கிரமான, உச்சாடனத்துடன் விழிகளை வீசினாள். ''தெய்வம் கல்லு! அதாலே எப்பிடி வந்து நாயம் கேட்க முடியும்? ஆமா, நானு ஏழை பாழை. அதிலயும், போக்கத்த நாதியத்த அனாதை! என்னாலே நாயத்தை உண்டாக்கிக் காட்ட ஏலும்!... இந்தாப் பாருங்க!'' என்று சினம் பரவச் சொல்லி, அதே மூச்சுடன் வாய் எச்சிலைக் கூட்டி, ஏகாம்பரஞ் சேர்வையை நோக்கித் துப்பி விட்டாள் செவலி!

''ஆ!...''

பாவம், சேர்வை சிலையாகிப் போய்விட்டார்!

பாவத்தையும் புண்ணியத்தையும் சீர்தூக்கிப் பார்க்கத் தக்க வேளையா அது?

முகத்தில் பரவியிருந்த எச்சிலைப் பதற்றத்துடன் வேஞ்சினால் துடைத்துக் கொண்டு சிவகாமியை நோக்கிப் பாய்ந்தார் ஏகாம்பரம். வெறி கனன்றது.

அதற்குள் ஒரே பாய்ச்சலில் புள்ளி மானாகப் பறந்தாள் சிறுமி சிவகாமி.

''ஒங்க உப்பைத் தின்ன நன்றிக்காக இம்மா நேரம் நானு பொறுத்துக்கிட்டிருந்ததே பெரிசு!... இனியும் ஒங்க கை எம் மேனியிலே பட்டுச்சோ, அப்புறம் நான் பிசாசாகிப்பூடுவேன்!... தெய்வம் திருவுளத்துக்குப் பயப்படாதவங்க நீங்க! ஆனால், இந்த அனாதைப் பொண்ணுக்கு நீங்க பயப்படாமத் தப்பவே வாய்க்காது! நெனைப்பு இருக்கட்டும்!''

முருங்கைப் போத்தடியில் நின்ற சிவகாமி தேம்பினாள். வேர்வையும் கண்ணீரும் பெருக்கெடுத்தன. கன்னங்களில் ரத்தத் தழும்புகள் சிரித்தன, வெய்யிலில்.

அடிபட்ட புலியாக அடங்கினார் ஏகாம்பரம் சேர்வைக்காரர். தொங்கிய தலையை நிமிர்த்த முடியவில்லை அவரால். ''ஏழைக் கிறுது இம்புட்டுத் தொலைவுக்கா இருக்கு? நன்னி கெட்ட கழுதை! ஒன்னை இன்னிக் குள்ளாற கடிக்கக் குதறித் தூக்கி எறியலே, எம்பேரு ஏகாம்பரஞ் சேர்வை இல்லே!... நெனைப்பு வச்சுக்கிடு!'' என்று சபதம் செய்தார். உறுமல் அடங்கக் கால் நாழிகை பிடித்தது.

அனாதைச் செவலிக்கு அட்டகாசமாகச் சிரிக்கத்தானா தெரியாது?

எல்லைக் காளி அவள். அவளுக்கு விதியுண்டோ, வேதனை உண்டோ? — இல்லையெனில் அவள் ஏன் இப்படிப் பாழடைந்த கோயிலில் விளக்குக் கூட இல்லாமல் அநாதையாகக் கிடக்கிறாள்?

'பளா'ரென்று பொழுது விடிந்தது.

பொழுது விடிந்து எந்நேரமாகி விட்டது! இப்பொழுதான் குருந்திரக் கோட்டைச் சேவல் 'கொக்கரக்கோ' பாடியது.

''ஆத்தாடி! வலி தாளல்லியே!....''- நினைவுகள் அயர்வையும் அலுக்கையையும் ஈந்தன. நெட்டி முறித்து, உடம்பை முறித்து எழுந்தாள். ரவிக்கையிலும் பாவாடையிலும் செம்புழுதி அப்பி யிருந்தது. தட்டி விட்டாள். சுற்றிச் சூழ நோக்கினாள். கொட்டாவி பறிந்தது. 'குத்தீட்டி'க் கழி அவள் காலடியில் இடறியது. பெருமூச்செறிந்தாள். 'ம்... அந்த ஆம்பிளை, தான் செஞ்ச சபதப்படி என்னைக் கடிச்சுக் குதறி எறியக் காணமே?... ரவ்வைப் பொழுதும் ஓடிப்பூடிச்சே!... எனக்குக் காவலுக்கு ஆத்தாளும், என்னோட மனசும், எம்புட்டு ரத்தத்திலே உறைஞ்சிருக்கிற நன்னியும், இந்தக் கழியும்தான் துணை இருந்திச்சு!... மொதலாளியைக் காணமே?' — வைராக்கியத்தின் வெற்றியென அவளது உள் மனம் களித்துக் குதூகலம் அடைந்தது. ஆனால், அவளது வெளி மனமோ தேம்பித் தேம்பி அழுதது. சடாமுடி தரித்த மகேசுவரனைப் போல் காட்சி தந்த அந்தச் சாமி ஆடு இப்போது அவள் விழிகளில் நிழலாடியது. 'நானு என்ன செய்யிறது? வஞ்சனை


பார்த்தாலே உறக்கம் வருமே!
ஏன் வராது! படுக்கைமீது போட்டிருப்பது உலகப் பிரசித்தி பெற்ற ப்யோகேல் விரிப்பு! உன்னதமான பருத்தி இழையிலிருந்து பிரத்தியேகமாக செய்யப்படும் இந்த பாம்பே டையிங் விரிப்புகள் பட்டுப் போல மென்மையானவை; நீடித்து உழைக்கும் என்று சொல்லத் தேவையில்லை. இவை ப்ளெயினாகவும், கோடுகளுடனும், விதவிதமான பல டிஸைன்களிலும் கிடைக்கின்றன. (இவற்றிற்கு ஜோடியான டவல்களும் கிடைக்கும்!) எமது உலகப் பிரசித்தி பெற்ற ப்யோகேல் படுக்கை விரிப்புகளைக் கொண்டு உங்கள் படுக்கையறையை கண்டோர் பொறாமைப் படும்படி வசதியாகவும், வசீகரமாகவும் வைத்துக் கொள்ளுங்கள். அவற்றின் இதமான ஸ்பரிச சுகத்தில் இன்பமாக உறங்குங்கள்! இன்றே ப்யோகேல் விரிப்புகளை வாங்குங்கள்!
பாம்பே டையிங்
BD 6258

யாவா நடந்தேன்? என்னையும் மறந்து பொட்டுப் பொழுதுக்குத் தூங்கிப்புட்டேன். திக்கு தப்பிப் போய் மாட்டிக்கிடுச்சு செம்மறி, நரி வாயிலே! அந்தப் பாளத்த நரியைக் கண்டா சும்மாவா விட்டிருப்பேன்? அதை என் உசிரு போனாலும் ஒரு கை பார்த்திருக்க மாட்டேனா?... அந்தச் சேர்வைக்கார ஐயா என் தப்புக்கு முதலிலே அடிச்சதோட நின்னிருக்கப்புடாதாங்காட்டி? திருப்பித் திருப்பி இப்பிடியா தெக்கு வடக்கா போட்டுப் பின்னி விளாசறது? என்னோட அப்பனே ஆவியோ அந்த அநியாயத்தை நேருக்கரமாக் கண்டாக்க, அப்பவே சேர்வையோட ரத்தத்தை உறிஞ்சியிருக்க மாட்டாகளா?... அநாதை செத்தா அழுறதுக்கு யாரு நாதின்னு ரோசிச்சிட்டாரு முதலாளி! நானு வலி அத்துமீறினதாலே தான், அவரு மூஞ்சியிலே காறித் துப்பினேன். இல்லாமப் போனா, நான் செய்வேனா அப்பிடி?..... நானு செஞ்சது தப்புதான்! ஐயையோ!.....' கழிவிரக்கத்தில் காலை இளங்கிரணங்கள் சிலிர்த்தெழுந்தன.

அவனுக்குப் பசி காதை அடைத்தது. நேற்றைக்குக் காலையில் சேர்வை வீட்டில் பழைய கஞ்சி ஒரு வட்டில் சாப்பிட்டான். முன் இரவில் வழக்கமாகச் சாப்பிட வேண்டிய சோற்றுக்குத்தான் தடை வந்து விட்டதே! விவரம் அறிந்த கிழவி ஒருத்தி சிவகாமியிடம் வந்து சாப்பிடக் கூப்பிட்டாள். ஆனால் சிறுமி மறுத்துவிட்டாள்.

'இனி என் கதி?...' — விளைக் குறியில் விதி விளையாடியதா?

'இன்னம் அஞ்சாறு பொழுதுக்குள்ளாற வடக்குச் சீமையை நாடிப் பறிய வேணும். அதுக்குள்ளே என் சீவன்களை — நானு இம்மாம் காலம் வளர்த்து மேச்ச அந்தச் செம்மறிங்களை ஒருவாட்டி கண்ணாறப் பார்த்துப்புட வேணும். பாவம், கல்லடிபட்ட அந்தச் செம்மறியோட கால் இப்பைக்கு வசப்பட்டிருக்குமா?...பாவம்!' என்று எழுந்தாள் சிவகாமி.

அப்போது:

''தங்கச்சி!'' என்று பாசத்தின் இரட்சி குலுங்கக் கூவி வந்தான் ராமையா.

''அண்ணாச்சி!'' என்று தேம்பித் தேம்பி அழுதாள் சிவகாமி.

''செவலித் தங்கச்சி! நீ அழப்புடாது. ஒன் அண்ணன் குத்துக்கல்லொப்ப இருக்கையிலே நீ எதுக்குக் கண்ணைக் கசக்குறே? அல்லாச் சங்கதியும் கேள்விப்பட்டேன். சேர்வையைப் பத்தித்தான் அடாவடியின்னு பேசிக்கிறாக!...''

''நானு நன்னி கெட்டவளா, அண்ணாச்சியோ?'' தர்மத்துக்குப் பயந்து, நடுக்கத்துடன் கேட்டாள் சிறுமி.

''அதெல்லாம் இல்லே. பாம்பு கடிக்க வந்தால் நம்மைத் தற்காத்துக்கிட அதை அடிக்கிறதில்லையா?... நீ அப்பிடிச் செஞ்சது மெய்யாலுமே ஒரு அதிசயக் கூத்துத்தான். ஒம் மனசுக்கு உள்ள துணிச்சலிலே அப்பிடிச் செஞ்சே நீ. என்னாலே கூட அப்பிடிச் செய்ய வாய்க்காது. ஆத்தா உம் மனசிலே பாஞ்சு அப்பிடி ஒன்னை வசப்படுத்தி யிருக்கோணும்!...''



'' மற்ற தொழிலாளிகளைப் போல எனக்கும் 'ஸ்ட்ரைக்' பண்ணனும்னு ஆசையா இருக்கு சார்! அதற்காகவாவது மனம் இரங்கி உங்க தொழிற்சாலையில் எனக்கு ஒரு வேலை போட்டுக் கொடுங்கோ!''

சிவகாமி இன்னமும் விம்மி வெடித்துக் கொண்டுதான் இருந்தாள்.

''அழாதே செவலி!... அண்டையிலே ஒரு பண்ணையிலே ஒனக்கு ஒரு வேலை இருக்கு. ராவிலே நானு திரும்பினதும், நடப்பு அறிஞ்சுக்கிட்டு, ஒரு நொடியிலே ஒன் வேலைக்கு ஏற்பாடு செஞ்சுப்புட்டேன்.. இந்தா, இட்டிலி சாப்பிடு. ரோசக்காரப் பொண்ணு. நீ ராத்திரி முச்சூடும் குலை பட்டினியாயில்ல கெடந்திருப்பே!.., உங் கண்ணுக உள்ளே இடுக்கிப் போயிருக்கே?... ம்.... சாப்பிடு. ஒனக்குப் பிடித்த வர மொளகாய்ச் சட்டினி இருக்குது!''

''நீ சொல்லி, நான் தட்ட முடியுமா?'' மறுபடியும் விம்மினாள்; பொருமினாள் செவலி. இட்டிலிப் பொட்டலத்தை வாங்கிக் கொண்டாள்.

''நீ மல்லுக்கட்டிக்கிட்டு அழுதால், அப்பாலே நானும் அழுதுப்புடுவேன், சொல்லிப்புட்டேன்!'' ராமையாவுக்குத் தொண்டை கம்மியது.

''சரி, சரி. அண்ணாச்சி, இனி நானு கலங்கல்லே!... ஒரு சங்கதி!... எங்க முதலாளி... சேர்வைக்காரர் என்னை நன்னி கெட்ட சென்மம்னுதானே நெனைச்சிருப்பாக?'' என்று வினயமான ஏக்கத்துடன் வினவினாள் சிறுமி. விதரணையான ஐயப்பாடு!

''அவரு நெனைச்சா நெனைச்சுக்கிட்டுமே? நமக்கென்ன காச்சா தொங்குது? ஆடு காடு மாறிப் பூட்டாக்க, அதுக்காக நாமளும் நரியோட மல்லுக்கு நின்னு நம்ம உசிரையும் அந்த நரிகிட்டே ஒப்படைக்க வேணுமாக்கும்? அதானே அந்தச் சேர்வையோட நெனைப்பு! சே!... அவரு கெடக்காரு; விட்டுத் தள்ளு!... உண்ட சோத்துக்கு

ஓட்டுதலோட உழைச்சே! அது போதாதா? என்றான் ராமையா. முடிவில் சிரித்தான்.

அவன்மாதிரி அவளால் சிரிக்க முடியவில்லை.

பனை உச்சிக்கு வந்து கால் பாவினான் சூரியன்.

ஏகாம்பரஞ் சேர்வையின் வீட்டின் முன் குடியிருப்புக் கும்பல் அலை கடந்திருந்தது.

அந்தக் கும்பலுக்கு மத்தியில் சிறுமி செவலி — ஆமாம், செவலி என்கிற சிவகாமி தன் ஞாபகமிழந்து கிழத் திண்ணையில் கிடந்தாள். முகத்திலும் நெற்றியிலும் கைகளிலும் ரத்தம் பீறிட்டுக் கொண்டிருந்தது. கண்கள் மூடியவை மூடியபடியே இருந்தன. உடல் கட்டை போல் கிடந்தது. ரத்தப் பாளங்கள் பயங்கரமாகக் காணப்பட்டன!

''ஆமாங்க!... புதுசா வாங்கின வயல் வரப்பை நாடிக் கொஞ்ச முந்திப் போய்க்கிட்டிருந்தேன். சுடலைக் காட்டுக்குக் குறுக்கே விழுந்து வெரசா நடந்தப்போ, என்னமோ செம்மறியாட்டுச் சத்தமாட்டம் காதுக்கு எட்டிச்சு. எட்டி நின்னு பார்த்தேன். என்னோட செம்மறி ஒண்ணை நரி புடிச்சு வச்சு மல்லுப் புடிச்சுக்கிட்டு இருந்திச்சு. அந்த நரியோட மல்லுக்கு நின்னு தன்னோட குத்தீட்டிக் கழியைச் சுழட்டி வீசித் தாக்குப் புடிச்சுக்கிட்டு இருந்திச்சு செவலி... ஆமாங்க எங்க ஊட்டுச் செவலி! என் கண்ணை நம்பலே ஏலலே!..., நரி செவலி மேலே பாய்ஞ்சு கடிச்சுக் குதறிப் புட்டுச் செம்மறி மேலே குறி வச்சுச்சு. விடலே செவலி! செம்மறி கத்திச்சு. இந்தச் சமயத்திலேதான் விழுப்போடே செவலி குத்தீட்டியாலே நரிவாயிலே குத்தி ஒரே இழுப்பா இழுத்திச்சு. செவலி சின்னப் பொண்ணு. ஆனால் அதோட நெஞ்சுரம் யாருக்கும் வர வாய்க்காது. ஆத்தாளேதான் அது நெஞ்சிலே பாய்ஞ்சிருக்க வேணும்னுகூடத் தோணுது! நரி வாயைப் பொளந்தடியுந்தான் நான் பயம் தெளிஞ்சு ஓட்டிப் போனேன் அங்கிட்டு. பாவம், எம்புட்டுச் செம்மறியைக் காப்பாத்தறதுக்காகச் செவலித் தங்கம் தன் உசிரையே பணயம் வச்சிடத் துணிஞ்சிருக்கே!... இல்லாங்காட்டி, நரியைச் சாடுற வலு அதுக்கு வந்திருக்குமா? நரி மூஞ்சியிலே முழிச்சவுக உசிரு தப்பிக்கத்தான் ஏலுமா?'' சேர்வையின் செம்மறியாடுகளை மேய்ப்பதற்கு நியமிக்கப்பட்ட புது ஆள் விவரித்தான்.

சேர்வையின் குரல் தழுதழுத்தது. அவர் செவலியைப் பார்த்தார்.

செவலியின் கண்கள் இன்னமும் மூடியவை மூடியபடிதான் இருந்தன. கரணை இன்னமும் தடம் பதிக்கவில்லை. ரத்தம் வழிந்து கொண்டேயிருந்தது.

ரத்தத்தை அவர் எவ்வளவு தடவைதான் துடைப்பார்?

நரிக்குப் பலியாக இருந்த அந்தச் செம்மறி வெண்ணிறப் புள்ளிகள் துலங்க, கதறியபடி சுற்றி வந்து, காதுகளை உலுக்கிக் கொண்டு சிவகாமியின் கால்மாட்டில் நின்றது. அடிபட்ட அதன் கால் சிராவிவிட்டது போலும்! உடம்பில் மட்டும் இரண்டொரு கீறல்கள் இருந்தன!

''தங்கச்சி!'' — ராமையாவும் அவன் சேக்காளிகள் பிரமனும் ரங்கனும் சிவகாமியின் முகத்தில் கண் பதித்துக் கண்ணீர் விட்டுக் கதறினார்கள்!

''டேய் சாம்பான்! ஐயா அம்பலம்! ரெண்டு பேரும் செவலியைப் பதனமாத் தூக்கி வண்டியிலே வையுங்க. அறந்தாங்கி ராசாங்க ஆசுபத்திரிக்குப் போகணும்!'' என்றார் ஏகாம்பரம் சேர்வை.

பூவம்மாவும், அவளை ஈன்றவளும் திகைத்து நின்றார்கள்.

சிவகாமியைக் கைப்பிடியாகத் தூக்கினார்கள் சாம்பானும் அம்பலமும்.

அப்போதுதான் விழிகளை மலர்த்தினாள் செவலி. நாற்புறமும் விழி விரித்தாள்.

''நானு எங்கிட்டு இருக்கேன்? என்னை விட்டுப்பிடுங்க. என்னோட மொதலாளி ஊட்டுச் செம்மறி உசிர் தப்பிக்கலியா?...'' என்று தேம்பிக் கொண்டே, தூக்கியவர்களின் பிடியினின்றும் வெறியுடன் நழுவித் தரையில் குதித்தாள். தன் முகத்துடன் அணைந்து நின்ற அந்தச் செம்மறி அவள் பார்வையில் தட்டுப்படவே, உயிர்ச் சிரிப்பு அவள் இதழ்களில் படர்ந்தது. புண்களின் உபாதைகள் எரித்தது அவளுக்குப் பொருட்டல்ல. செம்மறியைப் பாசத்தோடு தடவிக் கொடுத்தாள். ''நானு நன்றிகெட்ட செம்மம்னு நீயுமா நெனைக்கிறே?'' என்று வாய் பேச மாட்டாத அந்தச் செம்மறியைப் பார்த்துக் கண்ணீருடனும் விம்மலுடனும் வினவினாள் சிறுமி செவலி.

செம்மறி கத்தியது!

''நீ நன்றியுள்ள தேவதை ஆத்தா!'' என்று தேம்பினார் ஏகாம்பரம் சேர்வை, மனிதத்தன்மையின் நன்றியறிவு பொலிய.

புதிய மலர்ச்சியின் புனிதத்துடன் நிறைவுடன் கண்ணீர் பெருக்கினாள் செவலி.

''தங்கச்சியோ!'' மூன்று குரல்கள் பாசத்தின் ஆதரிசப் பான்மையுடன் ஓடோடி வந்தன.

செவலி ஏறிட்டுப் பார்த்தாள். பார்வை ஊசலாடியது. குந்தியவள் சாய்ந்தாள்.

''அண்ணாச்சிங்களா! ஒங்களை ஆத்தா தான் கொண்டாந்திருக்கா. அவ மவராசி! இனிமேலுக்கு நானு நாதியத்தவள் இல்லே! என்னை நீங்க மூணு பேருமாத் தூக்கிக்கினு போயி, நானு வளமையாத் தூங்குற அந்த ஆத்தா வாசல்லே கிடத்துங்க. என்னோட அப்பனும் ஆயியும் என்னை அழைக்கிற சத்தம் எங் காதுக்கு நல்லாப் புரிஞ்சுடுச்சுது!...'' செவலியின் தொண்டை அடைத்தது. மூச்சு முட்டியது. கண்கள் செருகத் துடித்தன. மேனி வாழைத் தண்டாகிக் கொண்டேயிருந்தது!

ஒற்றையடிப் பாதை வளர்ந்தது.

''தாயே! நீ என்னை இம்மாந் தொலைக்கு வைராக்கியமாச் சோதிச்சுப்புட்டியே, தாயே!'' என்று மண்டையில் ஓங்கி ஓங்கி அடித்துக் கொண்டு கதறினார் ஏகாம்பரம் சேர்வை அவர்கள்.

கிராமத்து மக்கள் கூட்டம் பிரமை பிடித்து நின்றது.

# ஸ்ரீ பிரஸன்ன வேங்கடாசலபதி ஸ்வாமி கோவில்

**திருப்பணிக் குழு, குணசீலம் (திருச்சி ஜில்லா)**

## பொதுமக்களுக்கு வேண்டுகோள்

அகண்ட காவேரியின் அடிப்பாகத்தில் காவிரித்தாய் மூன்று பிரிவுகளாகப் பிரிந்து திருவரங்கம், திருவானைக்கா ஆகிய தீவுகளை உருவாக்கும் இடத்திலே குணசீலம் என்னும் திவ்ய க்ஷேத்திரம் அமைந்திருக்கிறது. (திருச்சி-சேலம் ரஸ்தாவில் 14வது மைலில் இருக்கிறது) கலியுகத்தில் கண்கண்ட தெய்வமாக விளங்கும் ஸ்ரீ பிரஸன்ன வேங்கடேசப் பெருமானுடைய பெருமையை அறியாதார் யார்? அந்தப் பெருமானின் திருவருளால் தீராத வினைகளெல்லாம் தீருகின்றன.

இப்புராம்பெரும் திவ்யக்ஷேத்திரத்தின் மகிமை அதிகரித்துக்கொண்டே வருவது போல, இங்கு வரும் பக்தர்களின் கூட்டமும் நாளுக்கு நாள் அதிகரித்துக்கொண்டே வருகிறது. பக்தர்கள் தங்குவதற்கு வசதி போதுமானதாயில்லை. ஆகவே, குணசீலப் பெருமானின் ஆலயத்தை விரிவுபடுத்த வேண்டியது தலையாய பணியாக நிற்கிறது. அதற்காக ஒரு திருப்பணிக்குழு அமைக்கப் பட்டுள்ளது. அக்குழுவினர் **ஐந்து லக்ஷ ரூபாய்** செலவில் ஆலயத் திருப்பணியைப் பூர்த்தி செய்யத் தீர்மானித்திருக்கின்றனர்.

பொதுமக்களின் நல்லெண்ணத்தையும், பக்தி உணர்வையும் உறுதியாக நம்பித்தான் இந்தத் தேவாலய கைங்கரியம் மேற்கொள்ளப் பட்டிருக்கிறது. ஆகவே, ஒவ்வொருவரும் அவரவர்களால் இயன்ற பொருளுதவியைச் செய்து இத்திருப்பணியைப் பூர்த்தி செய்து வைத்து ஸ்ரீ குணசீலப் பெருமான் திருவருளுக்குப் பாத்திரராக வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறோம்.

**ஆலயத் திருப்பணிக்கு ரூ. 1001க்குக் குறையாமல் நன்கொடை வழங்குபவர்களின் பெயர்களைச் சிறப்பு முறையில் சலவைக் கல்லில் பொறித்துக் கோவிலில் தக்கதோர் இடத்தில் வைக்கப்படும்.**

நன்கொடை ரசீதுகள் ரூ. 5, 2, 1 வாங்கி உதவலாம். ஆலயத் திருப்பணி உண்டியலில் செலுத்தலாம். அதிகத் தொகை வழங்குபவர்கள் குணசீலம் கோவில் காரியதரிசியிடம் கொடுத்து ரசீது பெற்றுக் கொள்ளலாம். திருச்சியிலுள்ள திருப்பணிக் குழுத் தலைவர், பொருளாளர் இவர்களிடமும் நன்கொடை செலுத்தி ரசீது பெற்றுக் கொள்ளலாம்.

இப்படிக்கு

**டாக்டர் வி. கே. ரங்கநாதன்,** M. B. B. S. & D. M. R. தலைவர்

குணசீலம், ஸ்ரீ பிரஸன்ன வேங்கடாசலபதி ஸ்வாமி திருக்கோவில்

---

**மணியார்டர், செக் அனுப்ப விரும்புவோர் :**

**திரு எல். வேங்கடராமன்,** பி. ஏ., பி. எல்., பொருளாளர்

குணசீலப் பெருமான் திருப்பணிக்குழு, இரட்டைமால் தெரு, திருச்சி – 2

---

**ஆலயத் திருப்பணி நிதிக்காக**

உபன்யாச சக்கரவர்த்தி

**சேங்காலிபுரம் பிரம்மஸ்ரீ அனந்தராம தீக்ஷிதர் அவர்களால்**

23 - 12 - 67 (சனிக்கிழமை) முதல் 9 - 1 - 68 (செவ்வாய்க்கிழமை) முடிய 18 நாட்கள் தினசரி இரவு 7 மணி முதல் 9 - 30 மணி வரையில்

# ஸ்ரீமத் மகாபாரதம்

உபன்யாசம் நடைபெறும்

---

முன்புறம் சௌகரியமாக உட்கார சேர் ரூ. 15. ஜமுக்காளம் ரூ. 10



- ஓய்வு பெறாத உத்தமர்
- முக்காலம் காட்டும் கண்ணாடி!
- காமாலைக்குச் சிகிச்சை
- உறவு முறைத் தவறு
- மீறிய வாக்குறுதி

ராஜாஜி இதழில் தொண்டுக்குத் தொண்ணூறு என்ற தலையங்கத்தைப் படித்தேன். என்னையறியாமல் என் கண்களில் கண்ணீர் நிறைந்து நின்றது. கோடியில் ஒருவரான திரு ராஜாஜி, காலனை என்றும் வென்று ஊழி காலம் வரை வாழ்ந்து காட்டும் ஆற்றல் உள்ளவர். அன்றாட சாதாரண மனிதர்களின் பெருங்குறைகளை எப்படிப் போக்குவது என்றும், அவனுக்குக் குறைந்தபட்ச இன்பமான சுதந்திர, சுபிட்ச வாழ்க்கையை எப்படி அடைவது என்றும், சிந்தித்தும் ஆட்சியாளர்களுடன் வாதமிட்டும் தம் வாழ்நாளை மக்களுக்கு அர்ப்பணிக்கிறார். தள்ளாமையைக் காரணம் காட்டி ஓய்வு பெறாமல் உழைத்துக் கொண்டே இருக்கும் கர்ம வீரர் அவர். இப்படி உலக க்ஷேமத்திற்காகப் பாடுபடுவதால்தானோ என்னவோ, அவர் இந்தத் தொண்ணூறு வயதிலும், அயராது சலியாது உழைக்கும் பலத்தைப் பெற்றிருக்கிறார்.

சென்னை — 5 ''புனர்வசு''

ராஜாஜி இதழில் கோத்தமங்கலம் சுப்பு அவர்களின் 'சித்தத்தைப் பொன்னாக்கும் சித்தர்' என்ற படைப்பு தவத்திரு மகனின் பெருமையை விளக்கும் கொத்து. 'முக்காலமும் காட்டும் கண்ணாடியை — அவர் மூக்குக் கண்ணாடியாய்ப் போட்டவரு' என்ற வரிகளில் அடங்கிய உண்மை இந்திய வரலாற்று ஏடுகளில் குதிநடை போடுவதைக் காண்கிறோம். வாழ்க, கவிஞரின் ஆற்றல். வாழ்க, அப்பெருமகனும் ராஜாஜி.

அருப்புக்கோட்டை என். சுந்தரராஜன்

சென்னையில் காமாலை நோய் பலருக்குக் கண்டு வருவதாகத் தினத்தாள்களில் செய்தி வந்துள்ளது. அந்நோய் மேலும் பரவி வருவதாக அடுத்தொரு செய்தியும் வந்துள்ளது.

காமாலைக்குச் சிகிச்சை பெற என்னிடம் வருவோருக்கெல்லாம் தாங்களே சிகிச்சை செய்து கொள்ளுமாறு மருந்தைச் சொல்லி அனுப்பி விடுவது வழக்கம்.

எல்லோரும் குணமடைந்துள்ளனர். அச் சிகிச்சை முறையை எல்லோருக்கும் தெரிவிக்குமாறு கேட்டுக் கொள்கிறேன்.

கோவை இலையை அரைத்தெடுத்து உருட்டிய விழுது, வயதுக்குத் தக்கபடி, புளியங்கொட்டையளவு முதல் கொட்டைப் பாக்கு அளவு வரையில் தினம் இரண்டு வேளை காலை மாலை ஏற்பது.

கடுகரோஹிணி கஷாயம் — வயதுக்குத் தகுந்தபடி அரை அவுன்ஸ் முதல் இரண்டு அவுன்ஸ் வரை தினம் இரண்டு அல்லது மூன்று வேளை வேணுமானால் குடித்துத் தினமும் மூன்று நான்கு முறை குடலைச் சுத்தமாகும்படி செய்து கொள்வது.

பத்தியம் ஏதும் இல்லை.

சென்னை—34 ஸ்ரீஹரி

''இருள் நிறைந்த ஆத்மா'' என்ற திரைப்படத் திறனாய்வில் இரண்டு குறைகள் சுட்ட வேண்டியுள்ளது. அம்முக்குட்டி, வேலாயுதனின் தங்கை என்று குறிப்பிடப்பட்டிருந்தது. இது தவறு. அவள் அவனது மாமன் மகள். மலையாளத்தில் ''சேட்டன்'' என்ற சொல்லுக்கு அண்ணன் என்பது மட்டுமல்ல; அத்தான் என்ற பொருளும் உண்டு. வியப்பாக இருக்கிறதல்லவா? மேலும் அவனது தந்தை என்று குறிப்பிடப்பட்டிருப்பது அவனது தாய் மாமனாகும்.

திருவனந்தபுரம் மு. முல்லைமணி

விவசாய வருமான வரிச் சட்டம் காப்பி, தேயிலை முதலிய மலைத் தோட்டப் பயிர்களுக்கு மட்டுமே பொருந்துவதாக இருந்ததை எல்லா விவசாய நிலங்களுக்கும் பொருந்துவதாகத் திருத்திய போது, முன்னாள் தமிழக நிதி அமைச்சர் இந்தச் சட்டம் நில உச்சவரம்புச் சட்டம் அமுலுக்கு வருகிற வரைதான் அமுலிலிருக்கும் என்றும் பின்னர் மலைத் தோட்டப் பயிரல்லாத ஏனைய பயிர்கள் பயிரிடப்படும் நிலங்களுக்குப் பொருந்தாது என்று இச்சட்டம் மீண்டும் திருத்தப்படும் என்றும் கூறினார். ஆனால் உச்சவரம்பு ஏற்பட்ட பின்னும் இச்சட்டம் திருத்தப்படாமல் விவசாய நிலங்களுக்கும் இன்னும் நீடித்திருப்பது முன்பு அரசு அளித்த வாக்குறுதியை மீறியதாகும்.

நெல் மட்டும் உணவுப் பயிரல்ல. சோளம் கேப்பை போன்ற சிறு தானியங்கள், உளுந்து, துவரை போன்ற பயிறு வகைகள், மிளகாய், வாழை, காய்கறிகள் முதலியவை களும் துணை உணவுப் பொருள்களே. இவற்றின் உற்பத்தியையும் அதிகரிக்க வேண்டியது அவசியம். தமிழ் நாட்டில் உணவுப் பற்றாக்குறைக்குக் காரணம் நெல் விளையும் நல்ல வளமிகுந்த நிலங்களில் கரும்புப் பயிர் செய்வதே. இதைத் தடை செய்வதோடு உணவுப் பயிர்களைப் பயிரிட ஊக்கமளிப்பதற்காக விவசாய வருமான வரிச் சட்டத்திலிருந்து உணவுப் பயிர்களிலிருந்து கிடைக்கும் வருமானத்துக்கு விலக்களிக்கப்பட வேண்டும்.

திருநெல்வேலி இ. வே. சங்கரநாராயணன்

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Kilpauk, Madras-10
Managing Editor:] T. Sadasivam



# ஜம்ஷெட்பூரில் தொழிற்சாலையின் பாதுகாப்பு பணியின் பகுதி

தொழிற்சாலைகளில் ஏற்படும் விபத்துகளில் 75 சதவீதம் தவிர்க்கக் கூடியதாயுள்ளன என்று அனுபவத்தில் தெரியவருகிறது. ஏனெனில் தொழிலாளிகளின் கவனக்குறைவுதான் அவைகளுக்குக் காரணமாகின்றன. அதனால்தான் டாடா ஸ்டீலில் பாதுகாப்பு விதிமுறைகளுக்கு முக்கியத்துவம் கொடுக்க வேண்டும் என்று ஒவ்வொரு தொழிலாளிக்கும் வலியுறுத்தப்படுகிறது.

டாடா ஸ்டீல் ஆலையில் ஒரு தொழிலாளி முதன் முதலாக வேலையில் சேர்ந்தவுடன் அவருக்கு அறிவிக்கப்படுவது பாதுகாப்பு விதிமுறைகள் தான். அப்படி ஆரம்பிக்கப்பட்ட படிப்பினை கடைசி வரை தொடர்ந்து போதனைமூலம் நடைபெற்று வருகிறது. இயந்திரம் இயங்கும் இடங்களின் ஒழுங்கான கண்காணிப்பு, பாதுகாப்பு சாதனங்களை கையாளும் திறன், பாதுகாப்பு எச்சரிக்கை கமிட்டியின் சுறுசுறுப்பான உழைப்பு இவையெல்லாம் சேர்ந்து கவனக் குறைவால் ஏற்படும் விபத்துகளை முற்றிலும் தவிர்க்க உதவுகின்றன. தொழிலாளிகள் பயமில்லாமல் தொழிற்சாலையில் பணியாற்றும் சூழ்நிலையை உருவாக்குகின்றன. தவிர, பாதுகாப்பு விதிமுறைகளைப் பற்றிய பிரசாரம், பொருட்காட்சிகள், போட்டிகள் எல்லாம் ஒவ்வொரு தொழிலாளியிடமும் பாதுகாப்பு விதிகளை அனுசரிக்கும் பழக்கத்தை வழக்கமாக்கி விடுகின்றன.

1961ல் மாதத்திற்கு சுமார் 249 விபத்துகளாக இருந்தது 1966ல் 64 விபத்துகளாகக் குறைந்துவிட்டதே இவர்களின் தளரா முயற்சியின் வெற்றியாகும். 1966 ஜூன் மாத முதல் தேதியிலிருந்து 14ம் தேதி வரை தொழிலாளிகள் 24 லட்ச மணிகள் யாதொரு விபத்துமில்லாமல் யந்திரங்களுடன் ஒன்றி பணியாற்றினர். இச்சாதனை நம் நாட்டின் கனரக தொழிற்சாலைகளின் சரித்திரத்தில் கண்டிராத மகத்தான ஒன்றாகும்.

ஜம்ஷெட்பூரில் பாதுகாப்பு என்பது தொழிலாளிகளின் பணியின் பகுதியாக அமைந்துவிட்டது. அதனால்தான் தொழில் துறை வாழ்விற்காக இல்லாமல் அவர்கள் வாழ்வின் ஒரு பகுதியாகவே வளர்ந்து வருகிறது.

**டாடா ஸ்டீல்**

The Tata Iron and Steel Company Limited

TN 3617A

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

இலங்கையில் 40 சதம்
தபால் செலவு தனி



அ..ப்..பா!...தாங்க முடியாத ஜலதோஷம்!



அன்பையே தடவுவதுபோல, கொஞ்சம்
விக்ஸ் வேபோரப்பை தடவுங்கள்




மூக்கிலும், மார்பிலும், முதுகிலும் விக்ஸ் வேபோரப்பை தடவியதும், அவனுக்கு ஜலதோஷத்திலிருந்து, உடனே நிவாரணம் கிடைக்கிறது. விக்ஸ் வேபோரப்பின் இளம் சூடான ஆவியினால், உங்கள் செல்வம் சுகமாக மூச்சு விடுகிறான். இரவு பூராவும் அவன் நிம்மதியாக உறங்குவான்

# விக்ஸ் வேபோரப்

ஒரே இரவில் ஜலதோஷத்திலிருந்து நிவாரணம் அளிக்கிறது